கழியசி லாதபோது சேறது கழுவியு மிலாபமேது யானையு
மொழியசி லாதபோது பாசற வுதறவொ ணாதுபாச மூடு
மே. (௫௫)

வேறு.

உறவாடு பந்தங்க ளெல்லா முதிர்ப்பன்
றுறவாகும் வச்சிராயு தத்திற் றுணித்தே. (௫௬)

வடிவற்ற கோன்மைந்தன் முன்னின்று மறைநா
முடிவற்ற பலகோடி மொழியாத முன்னே. (௫௭)

தந்தங் தொழிற்கொன்று தாழ்வின்மை யின்னே
முத்தன் பெருஞ்சேனை யெல்லா மொழிந்தே. (௫௮)

ஞானவிநோதன்படைச்செருக்குமுற்றிற்று ஆ௲[illegible]௰௬.

——( )——

வேறு—ஞானவேந்தன் படையெழுச்சி.

அஞ்சேனை கண்டன்பு தாமுற்றி வாறே
நஞ்சே யனுன்மே னடக்கின்ற போதே. (௧)

வேறு.

வித்தக வேதங்க ளேவாசி யாவே
மெய்த்திற னுய்நின்ற தோர்பாக னாவே
தத்துவ மாகின்ற தேரேறி னாரே
தற்சொரு பானந்தர் தாள்சூடி னாரே. (௨)

வாதக ரோடினு மாதரவொ டோர்கால்
வாசியி லாவாசி யேவாசி தாளும்
போதமே போதக மாந்தேர்வு தேர்தாம்
போல்பவ ரேவீர ரேதோது மாறே. (௩)

வேறு.

தானதேதுமில தாகியாகவல தம்பிரானுடைய தானைமாகி
யானைதேர்புரவி யஞ்ஞமன்னனது மாயமாபுர மணைந்த
தே. (௪)

புறம்புறுதபடி சூழுநம்படைஞர் போதுகென்றருளு போதி
லோ, ரறம்புகாதபடை வீடுசூழவு மடங்கவும்படைஞ
ரானவே. (௫)

முகுந்தனன்றரனு மன்றுநாலுதிசை முகனுமன்றவர்த
மூலமே,புகுந்ததென்றிகல்புறம்புகண்டவ ரடங்கவுள்புகுத
போதிலே (௬)

வேறு,

மருவி யெங்குமுற நின்றபொரு ளின்றுபுவிமேல்
வடிவு கொண்டுவரு கின்றதென நின்றுமொழிவா
ரருவ மென்றுமொழி கின்றபொரு ளிங்குவருதற்
கடிமை யென்றுசிலர் நின்றுநகை கொண்டுவிடுவார். ( )

சமய மென்பனவு மொன்றுமில தென்றுமொழிவார்
தவமுடிந்தது முடிந்ததென நின்றுசமைவா

ரமையு நந்துழனி யென்றமைவு வந்துவிடுவா
ரறிவி லன்புரம ழிந்ததினி யென்றயருவார் (அ)
குடிகெ டும்படிபு குந்ததுணர் வென்றுதளர்வார்
குலம டங்கலுமு டிந்ததென நின்றுகுலைவார்
முடிவில் வந்துறுவ தொன்றென மொழிந்தகனியார்
மொழியு மின்றுதலை வந்ததென நின்றுமொழிவார் (௯)
பறைவ தென்கொல்பல விங்கவர்க ணின்றுகெடுவீர்
பவமெ றிந்துவரு கின்றபடி கண்டுமினநீ
ரிறைவ னன்றென வியம்புவதெ னென்றுமொழிவா
ரிருவர் தங்களி லியம்புவ தடங்கவிவையே, () ஆ. ௩௨௬

---

வேறு.

அஞ்ஞவேந்தன்படையெழுச்சி.

விடர்விளங்கு தானையஞ்ஞ வேந்தனுக்கு மாந்தர்போய்ச்
சுடர்விளங்கு ஞானசேனை சூழ்ந்ததென்று சொல்லவே. ()
மூவர்சேனை யென்கண்முன்பு நிற்கவில்லை மொய்ம்பினோ
டியாவர்சேனை யென்னைவெல்ல விங்குவந்த தென்னவே.
யாவர்சேனை யென்னயா மறிந்ததில்லை யெங்களுந்
தேவதேவ தேவனென்ற சின்னவோசை யென்னவே. (௩)

வேறு.

ஏகமுத லோனருவ ஞானிமார் செய்யவவ்
னென் கணெதிர் நிற்கவிலனே

ஏதுமுள வேலவினை மாரன்முதல் வீரர்படை
சிந்துவர்கள் சிந்திவிடவே. (௪)

வானவர்க டானவர்கண் மானவர்க ளானவரின்
யாவர்மறை கூறுபரிசே
ஞானபர ராய்மதன ராசன்முத லானவிரு
நால்வரையும் வென்றவவரே. (௫)

ஓதுமுத லிந்திரிய முள்ளுமன புந்தியுயி
ரோங்கியவ கங்காரமுமிங்
கியாதுமுள சங்கமெனு மேழணியி னென்றுவிடு
விக்கிலவ னிங்கிறைவனே. (௬)

ஆண்டகைய னகிலனை யஞ்சுதலொ ழிந்துவரு
மவனையெதிர் கண்டளவில்யான்
மீண்டிடுவ னகிலனை யஞ்ஞவர சென்றமையல்
வேறுபெய ரிட்டழையுமே. (௭)

என்றுபல பாஷைகள் கொடுத்துமத னதிபடை
யேவியிறை வன்கணெதிரே
நின்றுபொர நேர்ந்தி னெஞ்சினிசி கோடியிரு
ணின்றதென லாகுமிலையே. (௮) ஆ நாகசெ.



வேறு. தொந்தயுக்தம்.

வேத்தீதன்ப டையுடன் வெஞ்சினப்

போத கினன்படைபொரப் போகவே. (௧)

துன்னிட் டீடகன போதகந் தோன்றலும்
வென்னிட் டீடகின வைம்புல வேழமே. (௨)

இரத மான ரதத்தெதிர் நின்றில
விரத மான விடய ரதங்களே. (௩)

புரணப் பாய்பரி தோன்றப் புரத்துள
கரணப் பாய்பரி யாவுங்க ரந்தவே. (௪)

அறிவன் பெருஞ்சேனை கண்காண வெதிரே
வஞ்ஞன்கொ டுஞ்சேனை யஞ்சாம லெழவோ
வெறிவெங் கதிர்ச்செல்வ ரெத்திக்கு மெழவே
யிரியாம லிருணிற்கி னிதுசிற்கு மெதிரே. (௫)

வேறு.

ஓடலின்றியெதிர் நின்றவீரர்தமை வீரங்கொருவ ரொழிவுறச், சாடுகென்றருள வீரர்சொல்லுவர் வணங்கிவீரனிரு தாளிலே. (௬)

தும்பை.

அறிவிலன்படையு மளவினம்படையு மறியவின்றிவரு மறிவுறுங், குறியுறும்பரிசை யருளுகென்னவவர் குறியுறும் பரிசு கூறுமே. (௭)

வேறு.

விண்டிருந்தென்மெய் கண்டுளோர்தவ வேடமேவியென் கோடிமாதரைக், கொண்டிருந்தெனவர் செய்தவேதவங்

கொண்டகொண்டதே கோலமாகுமால். (அ)

ஆ. நாசமெக.

வேறு.

நனவுநிலைபோல வறிவுமறிவார்க
ணவையுமறிவார்க ளலவுளோர்
கனவுநிலைபோல வெதுவுமறியாத
வதுவுமறியார்கள் கயவரே. (௧)

வேறு.

கற்றவரு மற்றவரு மொருவர் செய்யுங்
கடுமையினிற் கழும்வகை யொத்து மொவ்வார்
செற்றவர்மே லுறுஞ்செயிர்க்கு நோவர் நல்லார்
தீயுடன்மே லுறுஞ்செயிர்க்கு நோவர் தீயார். (௨)

உள்ளமழிந் துகுமன்பர்க் கன்றி யோரா
வுலகர்திறத் தினுமுண்டங் கொவ்வர் மாந்தர்
கள்ளவிழிக் கழிந்துகுவா ரறியா ரீசன்
கலந்தவிழிக் கழிந்துகுவார் கவலை யற்றோர். (௩)

அறிவினான் மிகுபவரு மறிவி லோரு
மாயுமா றொன்றுமில ரெரினு மொவ்வார்
பிறிவிலா மையிலறியார் பிறவி நீத்தார்
பேரிருளா லொன்றறியார் பிறந்து சாவார். (௪)

மதவருடப் பால்பபக்குந் தொங்கை யின்ப
மய்க்கமுயக் குழுங்கணவன் வருடும் போது

மிகவுணர்ந்தோர்க் கும்பிறர்க்குஞ் செயல்கள் பார்க்கின்
வேற்றினும் பாவகந்தான் வேறு வேறு (௫)

அழுக்கிலவர் செயவேண்டுந் தவமு மில்லை
யழுக்குடையோர் செய்வதில்லை யாத லாலே
யொழுக்குடைய நல்வினையு முயர்ந்தோர்க் கில்லை
யொழிந்தோர்க்கு மில்லெனினு மொவ்வா ரொவ்வார் (௬)

மேவிவிடு மருட்படைக்கு மருட்ப டைக்கும்
வேறறிய விவ்வாறு விளம்ப வீர
னேவிவிடு மளவதனி லஞ்ஞ சேனை
யிறந்தபடி யதனையுமிங் கியம்பல் செய்வாம். (௭)

வேறு.

உருபக மகளிர் இறத்தினை யுசாவொடு மறமொடிழிப்பொடு
திருபகன் மதனை பழித்தன னிலவிய ரதியு மிறப்பவே. (௮)

பரவினு மிகலு மிரங்கலில் பாடுறு கொலையு மெரிந்தெழு
கோபனு மடைய நலம்பல கூறிய பொறையி னழிந்ததே ()
மோகனு முலகு மயக்குற மூடியமயலு மிகுத்தெழு, சோக
னு மகிழ்வு நசித்தனர் தூய்மதி கணவன் விழிக்கவே. (௧௦)

வேறு.

ஞானசந் தோடனில் லோபனு மாசையும் பேசுகள வர்தியு
மர்னசந் தாபனுந் தீனனு மானமுஞ் சேரவுயிர் மாயுமே.

வேறு.

அற்ன ழித்தனன் மறத்தினைய சூசையினைநல்
லமிர்த சீலனு மழித்தன னடக்கனுமதத்
திறன ழித்தன னும்பட்சையி லபேட்சைபொடிநற்
றேர்வி வேலபெரிய டம்பனுயிர் சிந்தியதுவே. (௧௨)

ஆங்க ரிப்பரிய சாந்தியி னழிந்ததுயிர்கட்
கன்னை போலுமவி ரோதமெழ வாருயிரையுந்
தீங்க ருத்தியிடு மச்சர மழிந்தயரவே
செய்யு மையமழி வுற்றது மிருந்தெளிவினை (௧௩)

தற்க மோனமுற வேபொடி தமம்பொடிவுறுஞ்
சத்து வத்தின்வரு சங்கமு மசங்கமுறநேர்
நிற்கு மோவொரு மருட்படை யருட்படையின்முன்
னிற்க வேதுணி வனேதுகுட ரேதுநிலையே. ஆ. [illegible]

வேறு—அஞ்ஞனழிவுவகை.

ஆவியை யொழியவெல்லா பழிந்தகப் பட்டவஞ்ஞப்
பாவியை யெந்தைபாதம் பணிகெனப் பகர்ந்தபோதே (௧)
அறிவில னெனும்பேரொன்று மழிவுறு திருக்கஞானங்
கிறிவரும் படியென்றுனை கிளர்ந்தெழு மென்னக்கேட்டே.

வேறு.

இருணிங் கிரவிமுன் னிற்குமோ பஞ்சுதா
னெரியின்முன் னிற்குமோ வெங்கனை யரவமுங்

கருடன்முன் னிற்குமோ ஞானமே வந்தாறுங்
கண்ணின்முன் னிற்குமோ வெண்ணுறுங் கன்மமே (௩)

அழியுமிக் காயமும் கழியுமுன் னிளமையு
மன்புறுங் கிளைஞரு மின்புறும் போகமு
மொழியுமிச் செல்வமொன் றுகநீ யுன்னியோ
வுடையநா யகனெஞ் சுணர்வுறு தொழிவதே. (௪)

வேறு.

தேவர்களு முனிவர்களுஞ் செழுமறையும் பழையவொரு மூவருமென் றிருந்தனையோ முழுமுதலென் றறிந்திலையோ. (௫)

இந்தவுல கத்தினிடர் கெடுப்பரிசிங் கெழுந்தருளி, வந்தவ னென் றறிந்திலையோ மானிடனென் றிருந்தனையோ. (௬)

அதிரேக வழக்குடையா னுடையான் றுணுடையா
னெதிரேநின் றனையாணி யிப்பொழுதே யிழந்தனையே (௭)

வேறு.

நாய னாடி யார்க ளவிற்றொறும்
பேய னும் பெருகச் சினஞ்செய்தே. (௮)

ஞான வேந்தன்வந் தென்னெதிர் நண்ணுற
லான வெல்லையிற் காணுமென் னுண்மையே. (௯)

என்ற வன்மொழி யெந்தைதி ருச்செவி
சென்ற வெல்லை சிரித்தருள் செய்யுமே. (௧௰)

உம்ப ரிம்ப ருவப்ப வொளிமிகுந்

தம்பெருந்தன்மை காட்டச்சமைந்துமே. (௧௧)

வேறு.

பழுது படாமறை வானுளோர் பண்டையோர் மூவர்க் ளின்றுகா, றமுது பெறுவடி யஞ்ஞுள்மேலாக விசைந்தன னண்ணலே. (௧௨)

வெருவரு நான்முக னாதியாம் விண்ணவர் மண்ணவர் வேறுளோ, ரொருவர் பெறுவடி யுணர்விலா னுச்சியின் மீது முதைத்ததே. (௧௩)

தென்றிசை யின்றுயர் தீர்த்ததாள் செய்தருளும்படி தெரியுமோ, வின்றிசை கின்றன வல்லவோ வித்தலை மீதுமிருக்கவே.

பெரியவர் தஞ்செயலாவதும் பிறரறிவாலறி வோமெனத், தெரியும தன்றது தெரிவதுஞ் செய்து முடிந்திடு திசையிலே. ()

வேறு.

செறிதரும்பிறவி முறியவந்திறைவர் திருவிளங்குகழலருளுநா, ளறிஞரென்றுமில ரவலரென்றுமில ரவர்சுதந்தரமடையவே. (௧௫)

பிறிவிலாதகுரு பரமனார்தமருள் பெருகவேயுடைய திருவினா, லறிவிலாவுடனிவ் வகிலமாயையுயி ரடையநூறும் வகையறைகுவாம். (௧௭)

வேறு.

சலிக்குமனத் தெழுச்சியறத் தவிர்த்திதம்விட் டகத்தே.

சிலுத்தெழுமத்துடிப்புமறத்திரித்தலையக்கெடுத்தே (கஅ)
குறித்திடலற் றிடத்ததனைக் குறிப்பவரைக் கெடுத்தே
கறுத்தவிருட் டனைக்கதுவக் கரித்தனைவிட் டழித்தே. (ககூ)

குறித்தல்குறிப்பறுத்தலெனிக் குறிப்பழியக் குலைத்தே
மறித்தவிடத் ததிற்பரிசித் தலைத்தெனல்மற் றொழித்தே
தனிச்சுடரிச் சகத்தொளிரத் தளைக்கெடவக் கணத்தே
புனித்திவலைத் தடிப்பொழியப் பரச்சுடர்விட் டழித்தே

ஒருக்கிவிரித் ததிற்சுழல்வுற் றுழற்றுமிருட் டனைப்பே
ரருக்கனுதித் தல்க்கணறுத் ததிற்பிரபையிட் டழித்தே.
செகத்தொழியத் திரித்தவிடத் தெளிர்ச்சியறச் சிதைத்தே
விகற்பமறத் தனிச்சுடர்விட் டெரித்தயர்வைக் கெடுத்
தே. (உங)

கலுழ்ச்சிகளிப் பகத்தெளிவுட் கலக்கமிருத் திகத்தே
செலுத்தல்திரித் தலற்றலையச் சிவச்சுடர்விட் டெறித்
[தே. (உச)

தனிற்பிறிதற் றிருக்குமருட் டனிச்சுடர்தற் பதத்தே
யினிப்பிறிதற் றிருக்கவிசைத் திடுக்கணறுத் துவிட்டே,
சகப்புரணத் தடிப்படையச் சமித்திடலுற் றிடத்தே, சுகத்
தெளிவிற் சிவப்பிரபையிற் களிப்பதனைத் தொலை
த்தே. (உரு)

வேறு.

காரியாதிக ளேழு மாயாவிட யத்தே
கையற்றறி வின்கா ரணமா திக ளேழும்
மாயாவிட யத்தே மாயச்சுக சுற்சின்
மயபூரண மேதன் வடிவானது வந்தே. (௨௭)

கோதற் றமிர்தாகிக் கூற்றற் றுணர்வாகிக்
கூறற்கரி தாகிக் கோசப்புலன் மாறித்
தீதற்றவர் காணத் தேனெத்தினி தாகித்
தேசத்திசை மாறித் தேறித்தெளி வாயே. (௨௮)

வேறு.

எம்பிரானை வந்தெதிர்ந்த வஞ்ஞனிங் குறுமேல்
யும்பர்வானு ருதிரும லொன்றினைவ் வொளியொடே.
அல்லலான காமராச னாதியான சேனையு
மில்லவாகி ஞானரூப மாகியே யிலங்குமே. (௩௰)

வேறு.

அறிவறி யாமைய ழிந்தனரே
யறிவறி யாமை யழிந்தனரே.
பிறிவறி யாமைபி றழ்ந்தனரே
பிறிவறி யாமைபி றழ்ந்தனரே. (௩௧)

காக்குமு ளத்தவ ராயினரே
காக்குமு ளத்தவ ராயினரே.

இருக்க முடிந்தவ ருட்பொருளே
யிருக்க முடிந்தவ ருட்பொருளே (௩௨)

வேறு

அழிந்தற மாயையி ருட்டெலா
மறிவுரு வாகநம் மண்ணலார்
மொழிந்தது மிங்கொரு வார்த்தையே
மூவுல கும்மொரு வார்த்தையே. (௩௩)

உழுந்துரு ளுந்துணைப் போதிலே
யுணர்வுரு வாகநம் முச்சிமீ
தெழுந்தரு ளும்மிரு போதுமே
யேத்துவ தென்றுமெப் போதுமே. (௩௪) ஆ ௩௯௰.

---

## வெற்றிசாற்றல்.

அறிவிலா னுயிர்க் கிறுதி செய்தபி
னறிஞர் தம்பிரா னரிய தாளிணைப்
பிறிவி லாததம் படையை மீள்கெனப்
பெரிய சேனையுந் திரிய மீளுமே. (௧)

காய மாகிவாழ் மாய மாபுரங்
கட்ட டங்கவே சுட்டல் கண்டுளோர்
தூய ஞானநற் சுடர்வி ளங்குமெய்ச்
சொரூப னார்பதந் தொழுது ரைய்பரே. (௨)

வேறு.

அடியே யுள்ளங் கறுப்பதுநல்
லம்போ ருகங்கள் சிவப்பதுமிப்
படியே வந்த பரனேநின்
பாதங் காட்டாப் பண்டன்றோ. (௩)

செய்யப் படுங்கன் மமுமுலகுஞ்
சிறியேம் வாழ்வுந் தீப்பிறப்பும்
பொய்யற் றிருப்ப தெம்பெருமான்
புவியிற்போதாப் போதன்றோ. (௨)

போக்கும் வரவும் பொன்றுடும்
புழுவார் நரகும் புசிப்பனவு
மாக்க மழிவுந் திருக்கடைக்கண்
ணுறுகா திருக்கு மளவன்றோ. (௩)

சாவா கின்ற பெரும்பிணிக்குஞ்
சனிக்கும் பிணிக்குந் தடுமாற்ற
மாவா வென்றுன் றிருக்கரத்தா
லஞ்சே லென்னு மளவன்றோ. (௫)

முத்திக் கரசே! நீயெங்கு
முழுந்தி யிருப்ப விழுந்தழுலும்
புத்திக் கிலேசந் தலைமிசைநின்
பொற்றாள் பொறியாப் போதன்றோ. (௭)

# அஞ்ஞவதைப் பரணி.

அந்தக் கரணம் புறக்கரண
மனைத்தை பலவோ டகம்புறமாந்
தொந்தக் கலாதி யாவையுநின்
றுணைத்தாள் சூடார் சொல்லன்றே. (அ)

சமயா லெந்தச் சமயமுமெச்
சடங்குஞ் சவலைத் தனமுமெலா
மமையா ததுநின் றிருப்பவள
மலரா திருக்கு மளவன்றே. (கூ)

வேறு.

எவ்வளவு மளவுபடா திருக்கை யுன்ற
னியல்பாகு மெங்களையெவ் வளவின் வைத்தா
யவ்வளவே யளவாகி யிருக்கை யெங்க
ளளவாகு நின்பெருமை யறிவா ரியாரே. (ம)

கடம்படுமிவ் வுடம்பானேங் கரண மானேங்
கண்டிருக்கும் கரியானேங் காட்சி தீர்ந்த
திடம்படுபே ருணர்வானே மெல்லா மானேந்
திருவிளையாட் டிருக்கின்ற செயலி தென்னே!. (மக)

அஞ்ஞான மென்னவுமங் கதனா லாப
வினைகபவ மென்னவுமவ் வயர்வு தீர்ந்த
மெய்ஞ்ஞான மென்னவுநின் னொருணீ தானே
விளையாட றோற்றுவித்த விரகி தென்னே!. (மஉ)

வேறு.

ஒழியாத பரவொளியா யோங்குமொரு பானந்தன்
வழியான செயலுறுதி வாழ்வன்றோ வாழ்வாதல். (௰௩)

ஆ. சாரு.

---

திருமுடிசூட்டல்.

அடங்காமற புலனுருக வடியிணையே வெளியான
திடங்காணல் கண்டிருக்குந் தெளிவன்றோ தெளிவாதல்.
தோன்றும்வினை வழியொழியத் தோன்றாத பொருடோ
ன்றிச், சான்றதுவே தானாகுந் தற்சிவமாய் நிறைந்தன (௨)
வே.

வேறு.

எல்லையில்பவ வேலைவீர னெறிந்தவாண்மை யறிந்தெமோர்,
சொல்லவில்லினி வல்லவாறடி தொழுகையென்றிவர் தொ (௩)
ழுவரே.

வீரஞானவி னோதனுண்மை விளம்புவார்கள் விளம்புவதீர்,
தீரனூர்தமை யாளுநாயகன் செம்பொன்மெல்லடி சேர (௪)
வே.

வேறு.

ஞானசக்கிர மெங்குமோர் நடாத்துமென்று நல்லதோ
ளானரத்ந முடிகவிப்ப வருளினானெம் மண்ணலே (௫)

ஞானவானை தாள்கள்சூடி நாயன்மார்க டாமெலா
மானவான வதிசயங்கள் யாவர்கூற லாகுமே. (௬)

வேறு.

ஒழிவற்ற தன்சோதி யுருவத்தை நம்பா
னுள்ளங்கை நெல்லிப்ப ழம்போல வுடையான்
மொழிவற்ற விரகேயெ னுநின்று மொழிவார்
முன்னோன் மலர்ப்பாத முடிமீது கொள்வார். (௭)

தன்செய்ய திருமேனி யேயன்றி வேறோர்
தானொன்றி லாவண்ண மெந்தம்பி ரானு
ரென்செய்த வாறோவி தென்னென்று மொழிவா
ரென்னே யிதென்னே யிதென்னே யிதென்பார். (௮)

பொருளேது மிவரன்றி வேறில்லை யென்பார்
போதங்கி டேர்செய்ய பொன்மேனி யென்பா
ரருளோங்கி டேர்வந்த திருமேனி யென்பா
ரளவாவ தேயிந்த வருளென்று மொழிவார் (௯)

பொய்யோடு மெய்யேது மில்லாத பெருமான்
புவனிக்க ணெம்மைப்பு குந்தாள விதுவு
மையோவெலா ரளவாவ தேயென்று மொழிவா
ரருளோவி தருளோவி தருளோவி தென்பார். (௰)

எண்ணாத பெருவாழ் வெமக்காய பெருமா
னெழுதப்ப டாமேனி யிதுகாண வெந்து

# அஞ்ஞவதைப் பரணி.

கண்ணான் இலையே யெமக்கென்று மொழிவார்
கண்ணல்ல காணாத கண்ணென் றுரைப்பார். (௫௧)

ஏயாத வெமையாளு பெருமானை யென்னை
யிரும்போநம்முடல்கொண்டெவ் விடமெங்கு மெங்கும்
வாயாய்வ ழுத்தாதி ராநின்ற தென்பார் (௫௨)
மலர்ப்பாத மீதுள்ள மாலாகி வாழ்வார்.

அருகே செலச்செல்லு வாரஞ்சி நிற்பா
ரஞ்சாது சென்றாலு மெஞ்சாது புல்லற்
கொருகோடி கையில்லை யேயென்று மொழிவா (௫௩)
வொன்றாலு மாறாது காணென் றுரைப்பார்.

வேறு.

அன்னையங் கவர்கள்செய லெண்ணா விங்கோன்
றனையுமள விலகண்டே யறியி னல்லா
வின்னைதங் குறைக்காலங் கழித்தா ரென்ன (௫௪)
விக்கால மென்னையென வியம்ப லாற்றே.

செய்தருளும் படிக்கிதுவு மன்றே தீர்க்கை
தேசிகனுக் கொருபொருளோ திரித்தல் பின்னு
முய்தரவர் தருளுகழ லுவந்து வாழ்த்தி (௫௫)
யுடம்பெடுத்த பயன்சிலநா ளுறுதற் கன்றோ.

முழுந்தியவன் பினர்மலர்த்தாண் முடிமேற் சூட
மூவர்களுந் தேவர்களு முழுதாம் போற்ற
வெழுந்தருளி யிருந்தனனிங் கிறைவன் செய்த

போகாத துவந்துவங்கள் போதல் துக்கம்
பிணம்போகப் போமாபோற் காண்மின் காண்மின். (௨)

தொத்தறவே மனந்துஞ்சப் புலன்க ளொந்துந்
துஞ்சியவா நஞ்சுமிழ்வா யஞ்சுஞ் சேரக்
கத்தறவே யடிக்கழுத்தை யரிய மாய்ந்த
கறையனற்கட் செவியொத்தல் காண்மின் காண்மின். (௩)

மைப்படியு நறுங்குஞ்சி மாயை மாய
மாய்ந்தபடி யகிலமெரி மருவ வேரிற்
கப்புடனுங் கிளையுடனு மரநே ராகக்
கரிசறப்பட் டமைபொத்தல் காண்மின் காண்மின். (௪)

அவிழாத பிணியாக்கை யுடைய வஞ்ஞ
னழிந்தபடி தான்சாவ வுலக மெல்லாங்
கவிழாதோ வென்னுமுறை யார்க்கு மேற்கக்
காமணிபோற் காட்டியவா காண்மின் காண்மின். (௫)

நெய்விட்ட கருங்குழலார் தம்பால் வைத்த
நெஞ்சொழிந்தா ரைம்புலன்சே ரின்ப நோக்
கைவிட்டா ரொழியாவா னந்த போகக்
காமுகராய் முடிந்தபடி காண்மின் காண்மின். (௬)

இணைப்பரிய பேரின்பந் தன்னின் மூழ்கி
இன்புறப்பட் டெவ்விடத்து மெக்கா லத்துங்
கணைப்பொழுது மின்பமிலா வுடம்பா லின்பங்
கைவிட்டீத் தமைகாட்டல் காண்மின் காண்மின் (௭)

செற்றவர்க டம்முடனுஞ் செறுதற் கென்றுஞ்
சிந்தைசெயுந் திறன்மறந்து சிறப்பே செய்யக்
கற்றவர்தம் முடனான பிறப்பை யெல்லாங்
கரிசறுத்த பெரியசினங் காண்மின் காண்மின். (அ)

வேறு.

பழிப்பாகி யொருகாலு மிதுகொண்டு கௌவுற்ற
பயனற்ற பொருள்விட்டெலா
மழித்தாலு மழியாத பொருள்பேணி யிவருற்ற
வாராமை காண்மின்களோ. (கூ)

ஓராக மேபண்டு வடிவென்றி ருந்தார்க
ளுணர்வுற்று மொழிவுற்றதோ
நேராக வுந்தங்கள் வடிவான திவர்நேதி
நேதித்தல் காண்மின்களோ. (0) ஆ சஙக.

களங்காட்டல் முற்றிற்று.

---

கூழடுவார்.

இந்தக்க ளன்பட்ட பாட்டிற்கு நீரொப்பி டத்தேடி டாதீச
ஞர், சந்திக்க வீறுபட்ட தொப்பப் பெருங்கூழ் சமைப்பா
ரை யழைமின்களே. (க)

வேறு.

சாந்தீயுள்வரு தாந்தீவந்தடி தந்தார்திருவரு டன்ஞேட்
டாந்திநல்லறு மாலாய்கூழட வாரீர்கூழட வாரீரே. (உ)

வேறு.

பொறையே மிகவரு நிறைவீ புகழ்புனை பொன்னீ யருளினை யுன்னியக், குறையா நிறைவுறு திருவீகூழட வாரீர் கூழடவாரீரே. (௩)

மேலா ரொடுமிகு முறவீ தீவினை மிகுவாரொடுவிடு துறவீயம், மாலாரொடுவரு கருணைய்கூழட வாரீர்கூழட வாரீரே. (௫)

முடிவேதுவரு முதலேயெனவொரு மொழியானளவிடமுடியாத, வடிவேயடைவதோர் மதியேகூழட வாரீர்கூழட வாரீரே. (௬)

தன்போலெவரொடு மன்பேவிளைவதோர் தாயேபவமெனுமாயாவிவ், வன்பேகெடவரு மன்பேகூழட வாரீர்கூழட வாரீரே. (௭)

பணியேசூடிய வணியேபாடிய பத்திகூடிய சித்திநிர்க்,குணியேகோமள மொழியேகூழட வாரீர்கூழட வாரீரே. (௨௩)

வேறு.

ஒருமையென முன்வகுத்த சித்ரமாகிய
வுலகவுரு வமைத்து லக்கையாகவிவ்
வுலகர்பழு வையொடித்தொ டித்தநீளெயி
றுதிர்செய்தரி சிபுடைத்தி டித்துமேலவர்
பெருமைமுடி யையடுப்பு வைத்துமேலுறு
பிணிசெய்யு டல்கடத்து ளைச்செய்தாருயிர்
பெரியவிரு ளைநெரித்தெ ரிப்பதாய்வினைப்
பிதிர்செய்தமிர் தம்பினிச்ச மைக்கவாருமே (௧)

பாவையுல கமனைத்து முற்றெமாருயிர்
படர்செயுட லெடுத்த ழித்துநோயொடு
பகலொடிா வுபவித்தி ளைத்திடாவகை
பவமெனிரு ளையறுத்து தித்தசோதிசெ
யரவமறை கள்சிரத்தி னிர்த்தமாடிய
வரியவொரு பனெனக்கு வைப்பெனுருயி
ரமலாடி யர்சிரத்தின் வைத்தபாமணி
யடிகள்பர வியுலக்கை குத்தவாருமே. (உ)

கூழடுவார் முற்றிற்று.

வேறு. சும்முலக்கை.

அருவரையா யிரஞ்சிரங்கொண் டருமறைக ளறியாத
ஒருபரையாங் கண்டனமே சும்மேலோ சும்முலக்காய்.
மாயவடி வளவாகி மதியிலியா யுழல்வேற்குத்
தூயவடி சூட்டினர்காண் சும்மேலோ சும்முலக்காய். (உ)

பின்னமொழி வகைபுகுந்தென் பெருங்கருணைப் பெருமா
னர், சொன்னமொழி யொன்றேகாண் சும்மேலோ சும்மு
லக்காய். (ங)

நம்மாலே காண்கின்ற நாமும்போய் நாமாகிச்
சும்மாவே யிருந்தனங்காண் சும்மேலோ சும்முலக்காய். (ச)

வான்றடங்கு முலகுகளின் மன்னுசரா சரங்களெலாந்
தோன்றுமிடன் பிறிதுண்டோ சும்மேலோ சும்முலக்காய் ()

உலகாகி யுயிராகி யுணர்வாகி யொருபொருளே
* துலகாமை கண்டாயே சும்மேலோ சும்முலக்காய் (சு)
சாத்திரமென் செயநமக்குத் தக்கமய லறுத்தபிரான்
தோத்திரமே யமையுமது சும்மேலோ சும்முலக்காய். (எ)
வல்லவகை பரனருளே வாயார வாழ்த்தாதே
சொல்லுவது பிறிதுண்டோ சும்மேலோ சும்முலக்காய். (அ)
சத்தமா திகளுமெலாந் தற்சொருப மானபரி
சுத்தமாய் விட்டதுகாண் சும்மேலோ சும்முலக்காய். (சு)

ஆ சசசு.

சும்முலக்கை முற்றிற்று.

கூழ்சமைப்பு.

பிடையிரு வினைகள்பற்கள் மேவரு மறியார்பற்கள்
அடையவு மிடித்தீராகி னடங்கலு முலையுட்பெய்யீர். (க)
இழைக்கும்வல் வினையெரித்திங் கென்பெலா முருக்கியுள்ளங்
குழைக்குமெய்ப் பத்திவந்து குறைவறக் குழைக்கச் சொல்லீர். (உ)
செப்பாதே பலவுநின்று சிலுப்பற வீருத்தியின்பந் தப்பாமே பதத்தைப்பார்க்கச் சாந்தியை யிருத்திக்கொள்ளீர். (ங)

வேறு.

கனிதனக்குநிகர் நெக்குநெஞ்சுகள்
கரைந்து கன்னலொடு பாலுமொத்

* துலங்காமை எனவும் பாடம்.

இனிதி னிப்படிச மைத்த போனக
மெடுத்து மெத்தென விருத்துமே. (௪)

கூழ்வார்ப்பு.

தன்மை யாரும்வகை மீளு மாளுடைய
தம்பி ரானரிய தாள்கடா
முண்மை யானுரிய வன்ப ரின்புறு
முளக்க லங்களை விளக்கியே. (௫)

கடங்களோடுமுள மான மெய்ப்பரி
கலங்களோடு முளவாவிதா
னடங்க நீயமிர்து செய்க வென்னவரு
ளையை தானமிர்து செய்யுமே. (௬)

அணங்கு தன்றிரு வுளப்பிர சாதமது
வடைய வேநிறைய வயிலுவீ
ருணங்கு கின்றவுட லான பேய்களையு
முடைய நீரழையு முண்ணவே. (௭)

வேறு.

வெந்தவுடலம் விடும்பரிசு வீடுவினவி மிகப்பசித்து
வந்தபேய்க்கும் பசிதீர வாரீர்மெத்த வாரீரே. (௮)

நசித்தேனிந்தக் கணத்துள்ளே நசியாவண்ண நல்குமிகப்
பசித்தேனென்று பதைக்கின்ற பதைப்பைத்தணிக்க வா
ரீரே. (௯)

துரியாதீதம் பதினுலிற் றேன்றியெவர்க்குந் தோன்றாத

பெரியார்தம்மை யானென்னும் பிரமப் பேய்க்கும் வாரீரே.
ஒளிதங்கியமா மறையோதி யுள்ளபொருளை யுணராதே
பளிதஞ்சுமந்த கழுதையதாம் பனவப்பேய்க்கும் வாரீரே.()

படித்துமறைகள் பொருட்படுத்திப் பயனினெட்டிப் பா
ராதே, வடித்தகிளிபோல் வருமாயா வாதப்பேய்க்கும்
வாரீரே. (௬௨)

வேதாகமங்கள் சொன்னபொருண் மெய்மையறிவார் போன்
றிருந்து, பேதாபேதஞ் சாதிக்கும் பெரும்பேய்தனக்கும்
வாரீரே. (௬௩)

சுத்தப்பிரம மதுநிற்கத் தொள்ளைச்செவியி னுணவான
சத்தப்பிரம மென்றோதுஞ் சளப்பேய்தனக்கும் வாரீரே.
பணியப்படுவா ருள்ளிருக்கும் பரதேவதையைப் பாராதே
மணியைத்துலக்கிக் கிணுகிணென வரும்பேய்தனக்கும்
வாரீரே. (௬௫)

ஞானம்போலச் சிலசொல்லி நாடற்கரிய முத்தியினுந்
தானுஞ்சிவமும் பாசமுமென் சைவப்பேய்க்கும் வாரீரே.
எட்டுக்கரும முட்டறச்செய் தெட்டுக்குணத்தோ டெழின்
முத்தி, வட்டத்திருக்கப் போமூத்தை வாய்ப்பேய்தனக்
கும் வாரீரே. (௬௭)

வெறுவாய்கொண்டு மென்றுமனவிகாரங்கொண்டு சிலபிதற்
றிப், பெறுவாரன்றி முத்திபெறும் பிடகப்பேய்க்கும்
வாரீரே. (௬அ)

உடலை விடுகை முத்தியென வுரைத்தவுண்மை யுணராதே
முடலையுடலை நானென்று முழுப்பேய்தனக்கும் வாரீரே.
தியக்கந்தீர்வார் நன்முத்தி சேர்வாரென்றுந் திறன்கேட்டு
மயக்கஞ்செய்யும் வாமப்பேய் வாய்க்கேநெருப்பைவா
ரீரே. (உ0)

அச்சந்ததிக ளெல்லாமா யல்லாதிருக்கு மறிஞரையு
மெச்சந்ததியுந் தமக்கன்றென் றியம்பும்பேய்க்கும் வா
ரீரே. (உக) ஆ சஎ௫

கூழ்வார்ப்பு முற்றிற்று.

---

வேறு-குணலைவாழ்த்து.

நின்மலன்கருணை யானடங்கவு
நெஞ்சறிந்திட * நினைந்தபின்
பொன்மலர்ந்தவிரு தாளினல்லவருள்
புகழுவாருளன் மகிழவே. (௧)

வேறு.

பாவிடை நூல்படு சிந்தைதனிற்
‡ பறைதப்பற வந்துப ராபரனார்
சேவடி தந்தமை பாடீரே
செய்ப கருணை யைப் பாடீரே (உ)

---

* நினைந்தனை எனவும் பாடம்.

‡ பரப்பற எனவும் பாடம்.

மீட்டவி ரகினைப் பாடரே
விளம்பிய தொன்றென்று பாடரே
நாட்ட வருளினைப் பாடரே
ஞானவி னோதனைப் பாடரே. (௩)

என்னையொ ழித்தமை பாடரே
யென்னுயி ருண்டமை பாடரே
தன்னைய ளித்தமை பாடரே
தத்துவ நாதனைப் பாடரே. (௪)

துன்னிநி றைந்தொழி யாதுநின்ற
சொருபா னந்தச் சுடர்வையந்
தன்னி னடந்தமை பாடரே
தானெனை யாண்டமை பாடரே. (௫)

ஞானமு ஞேயமு ஞாதுருவு
நாடிட வொன்றின்றி நின்றதுநா
மான முழுநலம் பாடரே
யல்லதில் லாதமை பாடரே. (௬)

மதிமிலி யாவுழல் கின்றநமை
மாறுட னுயவ ளைவந்த
வதிசய மேனினைந் தாடரே
யார்த்தெழுந் தார்த்தெழுந் தாடரே. (௭)

என்றிவை யேமிகப் பாடிப்பாடி
யெழுந்து விழுந்தெழுந் தாடியாடி
நன்றிந ருங்கண மானதெல்லா
நானவி தம்பட நட்டமிட்டே. (அ)

வேறு.

வரவுசெல வறுபழைய வழியொழிய மொழியுங்
குரவனடி பரவியிடு குணலைபல பலவே. (௯)
உரைகழிய வளமழிய வுணர்வழிப வணையுங்
குரைகழல்கள் பரவியிடு குணலைபல பலவே. (௧௰)
மதமதென விழிசொரிய மயிர்புளகம் வரவே
குதுகுதென வுளமுருகு குணலைபல பலவே. (௧௧)
கொடியபவ முடிவுசெய்த குரைகழல்கள் பரவா
முடியவிவ ரிடுகுணலை மொழியமுடி விலதே (௧௨)

வேறு.

பிணக்குறு மாறுச மயங்கத்திப்
பேரருள் சேர்மனங் கொண்டுநின்று
கணக்கிடு மாறுத விர்த்தபிரான்
கழலிணை பாடிக் களித்தனரே. (௧௩)

வேறு.

பாசமல மறவருளு பார்வையான் வாழியே
பாடுமறை முடிவினட மாடுவான் வாழியே

வாசமல ரெனமுழுது மேவினன் வாழியே
மாகரறி வரியவிரு தாளினன் வாழியே. (கச)

கோசமொடு முழுதுமற நூறினன் வாழியே
கூறவிர கரியமொழி யோதினன் வாழியே
நாசமறு மறிவுருவ மாயினன் வாழியே
நாடிலது கழலகிகழ் மேனியான் வாழியே. (கரு)

வேறு.

நிலையுமாற தின்றிநின் றிலங்குசோதி வாழியே
நேசமோடு மீசனென்ன நெஞ்சிலாத வஞ்சனை
மெனையுநீதி யன்பரோடு வேந்தநாதன் வாழியே
யென்னையாள வந்தகோல மென்றும்வாழி வாழியே. (கசு)

வேறு.

பந்தபாசம் வேரொடும் பறித்துவீழ வென்றலை
தந்தபாதம் வாழியே சமைந்தபார்வை வாழியே (கஎ)

வேறு.

வைத்த வைத்தகை ணழித்தவடி வாழியே
வைப்பி லாதகை ணளித்தவடி வாழியே
யெத்தி முத்தியரு ளீசனடி வாழியே
யென்னை யாளுடைய வெந்தையடி வாழியே. (கஅ)

சுத்த மறைதொடர்ந்த தாளினன் வாழியே
துற்றுவரும் பெரும்பவ நாசனீ வாழியே

தத்துவ நெறிதிறந்த சேவகன் வாழியே
தர்க்க சமயசண்ட மாருதன் வாழியே. (௧௯)

வாழிதங் குருபரன் மெய்ப்பத்த ரானவர்
வாழிமறை துணிபொருள் சித்தித்து வாழ்பவர்
வாழிபர மானந்தந் தித்தித்து வாழ்பவர்
வாழிசொரு பானந்தன் தத்துவப்பிரகாசனே. (௨௰)
தோத்திரமாகிய குணலைவாழ்த்து முற்றிற்று.

ஆகத்திருவிருத்தம்—௪௯௫

---

வெண்பா.

தரணிபுகழ் தத்துவனார் தாமுரைத்த ஞானப்
பரணிதனைக் கட்டவிழ்த்துப் பார்க்கிற்—கரணமுடன்
சேர்ந்துமண வாத சிவமணமே பூரித்த
சாந்தமண நாறுமே தான்.

அஞ்ஞவதைப்பரணி முற்றுப்பெற்றது.

---

பதினேழாவது

# மோகவதைப்பரணி.

கடவுள்வணக்கம்.

மதிபரிதி யெரிநீர்கால் வானவனி யியமானன்
வடிவா யெல்லா
வதிபதியா யனைத்துமா யல்லாத வறிவுருவை
யகத்துள் வைப்பாம். (க)

சொல்லாற்றம் மதிவிரகாற் றாயதிது தீயதிது
வென்று * மாக்க
ளெல்லார்க்கு மதுவதுவா யிறையிருக்கும் படிநீயயா
யிருக்க வென்றே. (உ)

விழுமதிநம் பாவுலகில் வீடுபெற முயல்பவர்க்கு
வேத நான்குந்
தொழுமதிநம் பாலதென விளமதியோன் றணிந்தவரைத்
தொழுதல் செய்வாம். (ங)

பேதமதி யுளதாகிப் பிணங்குமதி யிருள்போகப்
பிறிதொன் றில்லா
வேதமதி சயமாக விளம்புநிர திசயமதி
விளங்க வென்றே. (ச

வேறு.

கடியவினைமேவு காயமனதி
கரணவசுரேசர் கணமெலா

---

* மார்க்கர் எனவும்பாடம்.

முடியமறமேவி முனியுமறவாழி
முதல்வனிருதாள்கள் பரவுவாம். (ரு)

கலகமதனுதி படையதிபராவி
கழியவொழியாத கருணையா
னுலகமிடர்மாற வுளதுணர்விவேக
வொளிநயனவாழி யுதவவே. (சு)

வேறு.

அகமுளரி தனினுதவு மகிலவுயி ரகமுளரி
யருமறைதனுன்
முகமுளரி யெனமுனிவர் மொழியுமுனி பதமுளரி
முடியினணிவாம். (எ)
எழின்முளரி யொழியவரு மிருமுளரி யருளியிறை
யிருவினையெலாம்
விழிமுளரி கொடுபருகி மொழிமுளரி மலருநலன்
மிகவினையவே. (அ)

வேறு.

துறைகூறு படுமாறு சுழலாறு கலவாத வொளியானநான்
மறைகூறு மதஞான மணநாற வரும்யானை வழிபாடுவாம்()
சலமானை பலமாக மலைவாதி லலையாது தமைநாடியே
நிலமாக வெனைபாளி கழல்சூடி யுளஞான நிகழ்வாகவே.

மதியாளி சமயாதி வழியாறு மிறுகாலின் மறுகாலறுங்
கதியாகு மௌனவாறு முகமாகி யருள்காளை கழல்பாடுவாம்.
நவையாகு மதூசால கலஞ்சு மிதுவாத மெனுமாறு போ
யிவையாவு மெமதாகி யெவரோடு மவிரோதமிசைவாகவே.

வேறு.

வதைபுரையில் வமூநறவு விழைவுகள வெனவொழுகு
மயக்கணியையும்
கதையுமற வறிவருளு கமலமலர் வருகமலை
மலர்கருதுவாம். (௰௩)

ஒழியவரு முடலினுட னொருகலவி யறவுதறி
யுயிர்களுணர்வோர்
மொழியவரு மறுகலறு பதமதெனு முலகுகளின்
முடிவுபுகவே. (௰௪)

வேறு.

ஒன்றுமாய்வற நிற்பதில்லை
யுளத்தொழுங்கற யாவையும்
பொன்றமாய்வது முத்தியென்றருள்
போதியானடி யோசுவாம். (௰௫)

உரையுணர்ச்சியி னனிகழ்த்துவ
தொன்றுமற்றது வாகவே

திரையெனப்பிறழ் கின்றசித்த
விகாரமானவை தீரவே. (௰௫)

வேறு.

அகிலவுலகுயிர் கருவிவினைபொழு
தடையமலர்வது குவிவதாம்
பகலுமிரவுமோர் பணியுமறவொளிர்
பரிதியிருகழல் பரவுவாம். (௰௭)

குரவனடியிணை மருவியுலகவர்
கொடியபவவிருள் குலையுமா
றிரவுபகலற நிகழுமறிவொளி
யிதயவெளியினி னிலகவே (௰௮)

வேறு.

கஞ்சமக ளாய்நுகர்தல் காமுறுமு ளத்தே
கலைமகளு மாயினிய கற்றவரு ளத்தே
விஞ்சைமக ளாய்விமல யோகிய ருளத்தே
விளங்குமொரு மானடியு ளங்குளிர வைப்பாம். (௰௯)

ஐந்துபுல னுக்குமிசை வாகவிறை பெற்று
ளறுசமய நூலின்முடி வுற்றபொருள் காண
வுய்ந்துபுகு முத்தியை யுடம்புட னுளத்தே
விளங்கிட வுளங்கையின் விளங்கனியை யொத்தே, (உ௦)

வேறு-வாழ்த்து.

வாழிசொ ருபனொனை யாளுக ழறாணி
வாழவ ருதாணி வாழியே
வாழியெ னதிடரை மாறவ டிவுகொளு
வாழ்வுவ ருகுமரை வாழியே. (க)

வாழி சொருபனடி சூடிநிலன்மிசையின்
வாழும டியவர்கள் வாழியே
வாழிய ருளின்வழு வாதவ றநெறிசெல்
மாசி றவமுனிவர் வாழியே. (உ)

வேறு.

வாழிபழுதொன்றி லாமறை வாழியிறைதந்த வாகமம்
வாழிமுறைவந்த மாமனு வாழிபதினெண்பு ராணமே.

வேறு.

ஒண்பொருளோநாடி யிந்தநிலன்வாழ
வொண்டாளம்வாரி யெங்கணுந்
தண்பொருளைவீசும் வண்குருகையாளி
தந்ததமிழ்வேதம் வாழியே. (ச)

வேறு.

ஆரவார மறவொரு வார்த்தைசொ
லங்கணுனை நினைதொறுந் தங்கணீர்
வார வார வழுதருள் வாதவூர்
வள்ள லார்திரு வாசகம் வாழியே. (ரு)

வேறு.

ஒழிவில குண்மாது திருமுலையினூறு
முணர்வு பரபோத வமுதுண
மொழியின் மணநாற வருளு மறைஞான
முனிவர் தமிழ்மாலை வாழியே. (சு)

வேறு.

பாதமுடி தேடிருவர் பானுமனு காவொருவர்
பாதமலர் சூடியருள்பொரு
நாதமொழி யாலவனி வீடுபெற வோதுதிரு
நாவரசர் போதமது வாழியே. (எ)

வேறு.

நினைவினரி தாகி நெறியினெளி தாகு
நிமலநிறை வான பொருளையோர்
வினையிறனி தூது மறுகிடையி னேவு
விமலர்தமிழ் மாலை வாழியே. (அ)

வேறு.

இசடிகொண் மாயப்பி றப்பிரு டீர்ப்பவன்
செய்ய தாமரைப் பாதமுன் சேர்ந்தவெம்
மடிகள் சாத்திய வண்டமிழ் மாலைக
ளமல வாரிய மாலைகள் வாழியே. (கூ) ஆகூ உகூ

வாழ்த்துமுற்றிற்று.

இள

## கடைதிறப்பு.

பண்ணார் மொழி யமுதந்தரு பவளந்திற வாதே
கண்ணாலுயி ருண்பீர்கடை திறமின்கடை திறமின். (௧)

உருவாய்வரு பெருமாளையு ளங்கொண்டெவ ருடனுந்
திருவாய்மலர் திறவீர்கடை திறமின்கடை திறமின். (௨)

நீராவியு முழுதுநிம லந்தானும திருகண்
ணீராவியின் மூழ்கித்தனி நிற்பீர்கடை திறமின். (௩

அடையத்திரி புவனத்தையு மளவற்றுள நயனக்
கடையிட்டயில் பவர்பொற்கடை திறமின்கடை திறமின் ()

மலர்பொற்கழன் மலரிட்டிறை மதியைப்பரு கிடவே
சிலைசித்திர மௌனநிற்பவர் திறமின்கடை திறமின். (௫)

எளிவந்தரு ளிறைபொற்பத மிருகட்புல னுகரக்
களிவந்தவர் கனகக்கடை திறமின்கடை திறமின். (௬)

வேறு.

தணந்தபோது நமைப்பெறாது தலைப்பதந்தரு தம்பிரான்
மணந்தபோது நமைப்பெறாது மயங்குவீர்கடை திறமினோ

வேறு.

அகில புவனமு முடையவ னருளிஞ்
ஞமரர் பெறலரு மமுதினை நுகரவே
துகிலு மணிகளு நெகிழ்புற விழியுளே
சொருகு மறிதுயி லுடையவர் திறமினோ. (அ

அரிமு னிடவுணு மமுதல விதுபெரு
தவனு மலம்வரு மமுதென வமரர்தா
மெரிமுன் மெழுகென வுருகினு மடியரா
யினிய மொழியமிர் தருள்பவர் திறமினே. (கூ

வேறு.

எஞ்சவுல கங்களமிர் துண்டகளி தன்னினிறை யோனிரு கழற், கஞ்சமலர் கண்டகளி விஞ்சவரு வீர்கடைதி றந்திறமினே. (ய)

மெய்தழுவ வுங்கணிலை யுங்கலையும் வீழ்வுற விரும்பியிறை முன், கைதொழுது நும்மையு மிழந்துவிடு வீர்கடைதி றந்திறமினே. (கக)

வேறு.

சமய விதமள வறவுள துறைதொறுந்
தமர மிகவரு கலைபல மொழிதரு
சகல வினைகளு முதலிய வுலகுறை
சரமு மசரமு மெனவரு முயிரவை
யமையு முடல்கடோ றுளவக முளரிக
மமரு மகமென மருவிமு னுறைதரு
மகில முதலிய வறிவன தடிபணி
யமரவ னிதைய ரணிகடை திறமினே. (யஉ

உணரு முனிகண மடிசய சயவென
வுரைசெய் துதியொடு தொழவள வறுசிர

முடைய வுபநிட முவகையொ டுரைசெய
யுளமெய் யுணர்வதி சுகமொரு கரையறு
புணரி யொருதன திடனென விதமுறு
புவன முழுதையு மமுதுசெய் தறிதுயில்
பொறிகொ ளரவணை மிசையமர் பரனடி
புகழுபு னலர மகளிர்க டிறமினோ. (௬௩

அசையு முடலினி னுரவிய நெகிழ்வன
வவனி புனல்சுடு வனவசை வனவன
லனில மிடைவெளி ககனமு னுருவல
வறிய நயனமு முருவறி கருவிய
திசையு மொழிபுல னவைமன முதல்களு
மிணையவு மிரது முழுவது மறிவல
வெவையு மறிவறி வுருவெனு மிறைகுண
ரசித வரையர மகளிர்கடிறமினோ. (௬௪

உதய வரையர மகளிரெ மிரவிமு
னுடவு மவரதி பதியெனு மதியமு
மொளிர்வ திலருல கிருள்கெடு வதுமிவ
னுதய முறிலிவ னலதில திறையென
விதய வெளியினி னிலைபெறு மறிவுரு
விரவு பகலறு மிரவிமு னிகழ்கில
னிவனு நிகழ்வதில் விறையொளி யினிலென
விவரை நகும்வனி தையர்கடை திறமினோ()

பரவு புகழ்பழி பெறவிழ வுறவயல்
பதுமைபு ணர்பவள் பிரிவுற லுகமுயிர்
பலவு நிலைபெற னிதனமெ னிதினொரு
படியு மடிமகிழ் வறநிக முளமுடை
வரவு திரிவறு நிறைவுறு மறிவுதம்
வடிவ தெனவனு பவமுள முனிவரர்
மதுர மொழியமிர் தினைநுகர் வுறவுள
மகிழும் வனவர மகளிர்க டிறமினோ. (கசு)

வேறு.

வீரஞ் சிறந்த சிலையநங்க னேவலைவென்கண் டருளியவோங்
காரஞ் சிறந்த கனதனத்தீர் கனபொற் கபாடம் திறமினோ.
நல்லா தரத்து மைந்தர்க்கு நாவா லன்றி நயனத்தாற்
சொல்லா தெல்லாஞ் சொல்லுவீர் சுடர்பொற் கபாடந்
திறமினோ. (கஅ)

ஐயங் கொண்டு நடுத்தேடி யறிவோ ரறியப் போதமணஞ்,
செய்யுங் கொங்கை யருளுவீர் செம்பொற் கபாடந் திற
மினோ. (ககூ)

கன்னிநாடுஞ் சோணாடுங் கவலை தீரும் படிவந்தென்
சென்னிநாடும் பதம்பாடச் செம்பொற் கபாடந்திறமினோ.
வன்னி யன்ன விறன்மோகன் மாள வந்த மலர்ப்பதத்தென்
சென்னிகொண்ட பிரான்வென்ற களப்போர்பாடத் திற
மினோ. ஆ. (உங) கூ௰.

## காடு.

எனையாள வுருவாகி வருகோல வருண்மாது
மிவள்பேயும்வாழ்
நினையாமுன் மனன்வேவ வழன்மேவு மொருபாலை
நெறிகூறுவாம். (௧)

மண்மாறு நீர்மாறு மெரிமாறும் வளிமாறு
நம்மாறுமேல்
விண்மாறு மாளாத தொன்றில்லை நிலையாமை
யழல்வேவவே. (௨)

இருடாவும் வன்னெஞ்சர் நன்னெஞ்ச ரென்றில்லை
யார்கண்களுங்
குருடாய்வி டுந்தீய கடமண்டு கோபக்
கொடுந்தீயிலே. (௩)

எத்தீயி லுங்காம வெந்தீக டுஞ்சேரி டும்பைக்கெல்லாம்
வித்தீயு மதுசா டாத்தீயு மவ்வாறு மேல்கொள்ளுமே (௪)

நாசஞ்செய் பவவன்னி யழலாற வருண்மாதி னுமங்களா
நேசஞ்செய் மொழிமாரி பொழிபோது
மொருகண்ணு நீரில்லையே. (௫)

காயத்தி லுயிர்கால வனல்வெள்வு மழல்மாற
நிழல்கண்ணிநன்

னேயத்தி னருள்செய்ய பாதத்த வர்க்கன்றி
நிழலில்லையே. (௬)

வேறு

குறுகினண்ட ரழிவரென்று மொழிவதென்கொல் கொடிய
தீ; முறுகியண்ட முகடுகொண்ட முளரியாறு முனியுமே.
கருகியிந்து நிறனழிந்து கடமெழுந்த கனலிலே
யுருகியந்த வரியுமென்று முதுதியின்க ணுறைவதே. (அ
கலையிலங்கு மானையும்பர் கடவுளென்று விடுவதோ
மலையினும்பர் புகினுமண்டு மதன்வங்கி விதனமே. (௯)
திரையினின்ற வவையெனும்பர் தருவுமில்லை சுகதர்த
மரசுமில்லை புரைசெய்பந்த வனலிலெங்கு மழியுமே. (௰)
அழியுமிந்த வனலினெந்த வுலகுமென்ற வருகர்தா
மொழியுமந்த வருகர்பிண்டி மரமுமில்லை முடிவிலே (௰க)

வேறு.

உள்ளிற் பாதிப் போதும் பிரிந்
திரேனென் றுண்பேய்க் குரைக்கும்பேய்க்
கள்ளிப் பாவை யல்லாலோர்
கள்ளிப் பாவை யில்லையே. (௰உ)
பொருவி றந்த வானவரும் புகன்ற விந்தக் கடத்தீயை
வெருவி யன்றே பிறப்பில்லாவெளியாம் வீடும்விரும்புவதே

வேறு.

உன்னவரி தாயதிரு வுருவுதன்னை

யுணருமதி மாறொழிய மானுமில்லை
பன்னுகலை யொழிய வொரு கலையுமில்லை
பரமாம்ஸ மென்பதல்லாற் பறவையில்லை (௰௪)

பெருகிவருந் திருவுள்ளக் கருணைநீரும்
பேணுமடி யவர்தமது பெருகுமன்பா
லுருகிவருங் கண்ணீரு மில்லையாகி
லுலகிலுயி ருய்வதற்கோ ருபாயமுண்டோ. (௰௫)

வேறு.

தம்பி ரானிரு செங்கம லப்பதந்
தங்கி டாமன னேயித்த ழல்வன
மெம்பி ரானையுன் னுதவு யிர்களே
யிவ்வ னத்தினி யங்கிடும் பேய்களே. (௰௬

காடு முற்றும் ஆக ௬௬.

தேவி-உட்சோலை.

துப்பி லாவல கைக்கணஞ் சேர்புறஞ்
சோலை யைச்சில சொல்லினஞ் சொல்லுதற்
கொப்பி லாளுறை கின்றவட் சோலையை
யுரைப்ப தன்றது வுஞ்சிறி தோர்துவசம். (௧)

தாயும் பூதலத் தென்னையு மாண்டுகொ
டம்பி ரானும டியரு மல்லது

பேயும் பூதமுந் தேவரு மற்றும்பி
றக்கும் யாரும் புகுதப்பெ றூர்களே. (உ)

வேறு.

வெந்து தாபதர்க டாயுதர வெந்தீயினால்
வந்து தாபமறு நீழலவண் மந்தாரமே. (௩)
மெய்ம்மையேபெறவி ரும்பியடி மேவில்விரை
தம்மையேபெற வழங்குமவள் சந்தானமே.[யத்
பாரி சாதமுட னும்பர்பல முந்தருதலாற்
பாரி சாதமென வும்பர்முனி வோர்பகர்வரே.(௫)
ஏம நல்குரவி ரந்தவர்க ளெக்லையிற்பரந்
தாம நல்குமரி சந்தனமெ னச்சொறருவே. (௬)
கற்ப கந்தருவ தக்கலைக டந்தபொருளே
கற்ப கந்தருவ தக்கலைக டந்தபொருளே. (௭)

வேறு.

பிறிவழி யின்றி யுருகிய நெஞ்சு
பெருகிய வின்ப வுருவையே
பொறிவழி யின்றி மலர்வன நின்று
புலனெனு மைந்து தருவுமே. (அ)
மலர்தரு பஞ்ச தருமது வின்ப
மறிகட லென்று மறையெலா

மலரவ னந்தன் மகனா னின்ப
மதிமொரு விந்து வளவதே. (௬௯)

வேறு.

யாது நாசமு றவழி வொன்றிலா
வின்ப மாய்வினைந் தென்றுந் தருணமா
யோது நாலு மறையின் கொழுந்தின்மே
லுள்ள ஞானக் கொழுந்தொன்று மோங்குமே.

முடிவி லாப்பெரும் பாழாய்ச் சராசர
முற்றுந் தீயவு மற்றனை யாளவும்
வடிவி லான்வடி வாகிவ ருந்திரு
மாது பார்க்குங் கழுநீர் மலருமே. (௭௧)

வேறு.

பத்தி யாங்கடற் றேன்றுமோர்
பாவை முன்றிவிற் சங்கநன்
முத்தி யாம்பெறவ ழங்குமே
முன்னை நான்மறைமு ழங்குமே. (௭௨

மொழியி னுலளப் பரிதென
முளரி நல்குமுத் தேவரு
மழியு நாளினு மழிவிலா

வளவி லாதமர் நிதியை'ீய. (மங)
உட்சோலை முற்றும்

வேறு. தேவி கோட்டம்.

தொந்தமி லாவுள மென்றுமொ ழிந்தன
சுருதிகள் சொல்லளவா
வந்தமி லாதவ கண்டனெ டம்மை
யமர்ந்திடு மாலயமே. (மச)

விடலில மேவரும் வேதவி ழுப்பொரு
டனைவிட வில்லடியா
ருடலில மேயென வோர்தினன் வாதநல்
லூரனு வப்பினொடே. (மரு)

வேறு.

அண்டமெலாந் தன்னுடைய வகத்தடக்குந் திருமேனி யம்மைக்கேற்க
வுண்டெனலா வதுகோயி லன்பருள மல்லதுவே றுலகத்துண்டோ. (மசு)

வாசல்

செழுந்தரள வடமன்றி யகிலாண்ட வடமணியுந் திருவேர்வம்மா
தெழுந்தருளுந் திருவாச விருசெவியா மடியவரோ பெரியார்யாரே. (மஎ

விளக்கு.

என்றுமதி யொழியலகைக் கிடும்விளக்கா மன்னைதனக் கெல்லாருள்ளு
மொன்றுமதி யாந்தன்னை யொழியவ்வி யாதவிளக்
குலகத்துண்டோ.                                   (மஅ) ஆ அச.

தேவி கோலம்.

தாயிலும்வந் தெனையாண்ட தம்பிரான் மலர்ப்பாதந்
தரித்தோருள்ளக்
கோயிலுவந் தருளியுறை கோமளத்தின் றிருமேனி
கூற லுற்றும்.                                              க)

வேறு.

மூதியலோக மீரேழின் முளரிவாழு முதாதை
முதல்பிபீலி காதைக முடிவதாக மேல்கீழ்செய்
மதியும்வாழ்வும் வாணாளும் வலியும்வேறு வேறாகி
வருமநேக மாகோடி வடிவிலைக மாயாளே.                     (உ)
நகினுமாதர் வேல்போலும் விழியும்வாணி லாவீசு
நகையுமோவி டாதோதி நரகினாளும் வீழ்வேனை
யகிலமாத ரார்சேத மகலவாள வோர்மேனி
யகிலநாதர் தாமேவ வருளுகாதல் கூர்வாளே.                  (ங
நயனகீரொ டோவாது நதிசெய்நாதர் சீர்பாத

களினகீத நாவார நவிலுவார்க டாமார
வயனுமாலு மேருளு மவனுநாளு மாராயு
மழிவிலாத வோர்போத வயிர்தபான மீவாளே. (௪)

நிலனில்வானில் வாழ்வோர்க ணிலையிலாமை தாளுடி
நிகரில்வீடு சேர்போத நெறிகள்போல வேகூறு
சலனவர்தில் வீழாது தமையலாது தேடாது
சமதமாதி சேர்வார்க டலையின்மேவு தாளாளே. (௫)

வேறு.

அடியவ ரளவறு பிறவி யச்சம
தறவரு ளியபத மறியு மித்தனை
முடிபறி வுறமுயல் பணிய வர்க்கிலை
மொழிமுடி வெனமறை முடிவு ரைக்குமே. (௬)

அலர்மண முரைபொருண் மணிய திற்பிரபை
யவையிவர் நிகரென மிகவு ரைப்பதோர்
கலவிசெய் தொருவடி வுறம தற்செறு
கடவுளை மருவிய கனத னத்தளே. (௭)

அருவென வுருவென நிகழ னைத்துமோ
ரணுவென வவளொரு திருவு ருக்கொளு
முருவினை யணுவினி னணுவெ னக்கொளு
முணர்வரி தவள்செயு மொருந டத்தையே. (௮)

வேறு.

நிகழுமுல கினிலகில வுயிர்விழியு நிகழவொளியே
திகழுமெரி மதியிரவி திகழுமொளி திருநயனமே (௧௧)
கவியுமிரு ககனவொலி யுலகினுயிர் கருதும்வகையே
செவியினுறு திசைகளையு முதவுமவள் செவிமலர்களே. ()
நவமணியு மிறைவிதிரு வுருவினொளி யுடன்வில்லா
முவமமல வுலகமுயி ருணர்வுணரு மொளியவொளியே. ()
கருமுதலை கவரவொரு கரியதுயிர் கழிபொழுதிலே
யொருமுதலை நினையவிருள் கிழியவரு மொளிதிகிரியே ()
கருமிடைசெய் பலகரண வவுணர்நிசி சரர்கணனெலா
முருமிடியி னரவின்முடி வுறமுழவு மொலிபணிலமே (௧௩)

வேறு.

கறுக்குநிசி சரன்செவி வாய்முதல் ஞானகரு மங்களெனவே
யொறுக்குமொரு பதுசிரமு முருளவொரு கணையிறைவி
தனுவுதவுமே. (௧௪)

வேறு.

ஊனவடி வாளவுணர் கோடிபடை சாயவொழி
யாதொளிருமெய்ஞ்
ஞானவடி வாடனது ஞானவடி வாண்மிகு
நலன்பெருகியே (௧௫)

முத்தண்டு மொருதண்டு மலவெய்ய விறன்மோக
னெனுமந்தக
னுத்தண்ட மொழிவிப்ப துணர்வின்ப வுருவான
வொருதண்டமே. (கசு)

வேறு.

ஒழிவிலுலகெனு முருவினிறையவ
னுரகவணைமிசை யணைவதே
யழிவிலறிவெனு முருவினலமிகு
மடியரகமல ரமளியே. (கஎ)

எந்தவளவறு மண்டமனுவென
வண்டமெனவனு விசையுமா
தந்தவளவமை கின்றதடியவ
ரம்பொனகமல ரமளியே. (கஅ)

அயர்வுநினைவறு மகமென்மலரினி
லகிலபுவனமு மில்லையே
யுயிருநிகழ்விலை பரமுநிகழ்விலை
யிறைவியுணர்வொளி யுள்ளதே (ககூ)

வேறு.

அடிசூடு வாரடியா
ரமரர்முடி யவர்கோவின்

முடிசூடப் பெறுவதுவோ
பெறிற்பெறுவார் மூவருமே. (உ0)
பொழியின்மொழி மொழியினருண்
முதல்வியடி யாரொழியப்
பழியின்மறை யறியுமோ
பதம்பணிந்து பாடவே. (உக)

வேறு.

நாரணனே முதலாக நவைதீர வுலகங்காப்
பவரைக்காக்குஞ்
சீரணங்கின் பதமொருகாற் பிரியாநல் லன்பர்களே
திருமெய்க்காவல் (உஉ)
ஒன்பதுதீர்த் தமுமன்பர் தம்பாதம் விளக்கியநீர்க்
கொவ்வாதென்றே
யன்பர்கடங் கண்ணீர்கொண் டம்மைக்கு மஞ்சனநீ
ராட்டுவார்கள். (உங)

வேறு.

யாப்புச் செய்ய வலங்கலு மாடையு
மெனது நெஞ்சுசெஞ் சாந்த மிருகரங்
கூப்புச் செய்கை யணியென்று கூறினன்
குருகை யாளிமற் றூர்வல்லார் கூறவே. (உச)
புகலு மாறரி தாகிய பூவைக்குப்
பூத பௌதிக மாகிப்பொ லிந்திடு

மகில மாவி பரமிவை யன்றியே
யண்டருண்ணு மமுதோ வமுதமே. (உ௫) ஆ௱கக

ஆல்.

சிவனி டங்கொடிரு மாத மர்ந்தருளு
தெய்வ வாலமுள தென்றுமுன்
னுபநி டங்கள்பல வோதும் யானும
துரைக்க லாமள வுரைப்பனே. (க)

வேறு.

ஆனமுதலின்க ணேயடைய வாதியிறைபண்டை நாலுமறை
யாயவரி தென்ற வீடுவிளை யாடியருள்கின்ற தோர்மொழி
யில், வானமுதலைந்து பூதமிய மானனிகழ்சந்த்ர சூரியரு
மாயவருமென்று மோதுமொரு வாதையமுநின்று நீடியது.

ஆயபலவும்பர் வானமிடை யானநிலனம்பு ராசிமலை
யாழ்முறநின்ற பர்தலனு மரகவிவையைந்தி னேமுமவை
மேயபலவும்பராதியென வேறுபடவந்த யோனிகளு
மேவுசகதண்ட கோடிபலம் வீழவெழநின்ற சாகையது.(ங)

நாலுமறையங்க மாறுசிவ ஞானன்விரிஞ்ச னுமகில
நாயகர்விளம்பு மாகமமு நாடுபதினெண்பு ராணமிறை
கோலமறைகின்ற கீதையிதி காசமுடனன்ப ராவிகளி, கூர
மொழிசெஞ்சொன் மாலைபல கூறுகிளிதங்கு கூடுளது. (ச)

ஒருவமையின்றி மேவுபர லோகமுறு கின்ற வீடுமிறை
யோனையெதிர்கண்டு வாழவரு மோர்ளவிலின்ப வீடுமவ

னேருவமையென்ற வீடுமொருநீர்மையுறவொன்றும்
[வீடுமிவை
நீதிபெறவெம்பி ரானருள நேயமொடிருந்த நீழலது. (௫)

வானு மிறைவன்ச தாசிவனு
மீசனுமியங்கு மாருதமும்
வாளெரியு மும்ப ணுமானும்
வார்புனலும்வெங்க ணுகலையி
ணுனுநிலனும் பிதாமகனு
மாகவரு மைந்து பூதமிவ
ராவ தனுவின்ப மாணமினி
யாலி னளவென்கொ லோதுவதே. (௬)

வேறு.

சொன்னவாலி னின்னவூச லெல்லைசொல்ல வில்லையா
மன்னவாக னத்தரெல்லை சொல்லவாகி னுருமே. (௭)

ஆகூ ாமெசு.

வேறு பலிபீடம்.

அண்டபல கோடிகளா லாரணபண்டிதாமைத்த
பிண்டபலி யிடும்பெரிய பீடிகையார் பேசுவார். (க)

எத்தாநின் றிடுநாவோ டிணையடியின் விழுத்தலைகள்
கூத்தாட வுடலமுயிர் பலிகொடுப்பார் கோடியே. (௨)

வேறு.

தம்பிறவி வேரொடு தறிக்குமிறை தேவியிரு
தாடலைகடாங்
கும்பிட லொழிந்துபய னின்றி விலையாடுவ
குறைத்தலைகளே. (௩

வாளெரியி னிட்டபசு வாவிமகிழ் வுற்றிறைவி
வாணலகை கைக்கொளுமதே
யாளநல னுற்றறிஞர் ஞானவெரி யிட்டபசு
வாவியிவள் கைக்கொளுமதே. (௪)

நிலாவரு முகத்தினி னிலாவிய விழிக்கடை
நிலாதுயி ரறப்பருகியே
யுலாவர வரத்தனி யுலாவருவர் மெத்தென
வியோகினிகள் சிற்சிலவரே. (௫)

வேறு.

மருங்கிலா வகைவளர்ந்த தனங்கொண்டு வையமுயி
ரொருங்கெலா மொருங்கும்வகை யோகினிக ளுலாவுவரே.
அப்பொழுதைக் கப்பொழுது மதிசயமா மதுவேகொண்
டெப்பொழுது மதிசயமா யிருப்பரிடா கினிகளே. (௭)

வேறு.

இருணங்கக் கிரைகொடுத்தெழிலுருக் கொடுசகத்
திருணைசைக் கிடன்றரத் தெளிர்வர்யோ கினிகளே (௮)

பகலுமத் தமுமறப் பரமதத் துவமுறச்
சகலவத் துவுமெடுத் தயில்வார் சாதகர்களே. (௯)

வேறு.

அகிலமு மறவிழிந்த தாளுடையா
ராளவறி வறவுயர்ந்த நீண்முடியார்
பகலிருள றநிறஞ்செய் மேனியினோர்
பலிகொள வுலவுமந்த்ர பைரவரே. (௰)

அணிமுடி யளவிறந்த மேனியரா
லணிமலர் பெரிதுவந்து சூடுவர்நீள்
பணிமுடி தரவிழிந்த தாளவர்சேர்
பரிசுற வருள்வர்மந்த்ர பைரவரே. (௧௧)

கரியினு நிறனிருண்ட பேய்தொழவே
கருணையி னிரவியிந்து தாரகைவா
னெரியொளி கெடவிலங்கு பேரொளியா
யிலகுற வருள்வர்மந்த்ர பைரவரே. (௧௨)

கலகல னணிசிறந்த பைரவர்நீள்
கலைகளி னொலியடங்க வீணைக்கு
தலகலி கெடவியைந்த கீதமொடே
தமருக விசைவழங்கி யாடுவரே. (௧௩)

பழகிய வுடலமிந்தி யாதியினோர்
பணியற மதிவழங்கு நாதர்கள்பே

ஈழுகிய கருணைகண்டு நீள்விழியா
லருவிகள் விடுவர்நின் று சாதகரே. (கச)

வேறு.

அகிலசக மறையும்வகை யளவில்சுக மதுநிறைய
வமுதுசெய்து தாம்
பகலிரவு தெரிவதற விலகுமுரு வுடையர்சில
பைரவர்களே. (கரு)

எம்மையருள் செய்கென விரந்தவவர் கட்கினிய
பைரவர்கடாந்
தம்மையருள் செய்குதலி னொப்பர்சுமை யாளுடைய
தத்துவனையே. (கசா)

எறும்பயி டன்றலை துணித்தியமன் வென்றசிவ
யோகினிகண்முன்
சிறுமயி டன்றலை துணித்தவொரு தெய்வமயி
விற்றிகழ்வரே. (கஎ)

வேறு.

சாலவரிதென்று நாலுமறை யாயிரமுகங்க ளானவுயர்
சாகைபலகொண்டு தேடநனி தாரணியுள் வந்து தாயனிதர்
போலவெளிவந்த நாதனிரு பாதமுடி கொண்டு பூமியிடர்
போகவெனநின்றி டாகினிகள் போதமதுவுண்டு பாடுவரே.

ஞாலமமிர்துண்டு வேகபுல ஞைகடநின்று கால்வளைய
நாடிமனவன்கண் மேவுமுயிர் நாசமுறுமந்த காரமதி

யாலமமிர்துண்டு நாடரிய வாதியிறைபண்டை நீதியிவை
யாருமெனவன்பர் காணவிலை யாடுவர்கணங்க ளுயகரே.

பெலிபீடம்முற்றிற்று.

ஆ. கஙடு.

---

பேய்.

போதமாம்வடி வுள்ளவாறறு போகமாருத வின்றியே
பேதமாகிய வாதமேபகர் பேய்களைச்சில பேசுவாம். (க)

வேறு.

நீதிகணபங்க மேநிலை யானவுயிரும்பன் வானிலை, நீரின
தொழுங்கு போன்மதி நேருறவியம்பு வீடிறை, போதிநி
ழலின்க ணோதிய போதநெறியென்று வாதிகள், போரின்
மிகவென்று சிலர போர்வைபுனைகின்ற பேய்சில. (உ)

ஏசுமுளதின் றநேகம தேகமென்னின்றி டாதுட, லேதனள
வின்ப வீடுல கேழின்முடிவென்ற மாறுகள், பேசுமருகன்
ற ஞானெறி பேணியுடையின்றி நாடவர், பேயெனவியம்ப
வோர்துடை பீலிகொடுநின்ற பேய்சில. (ங)

நாடுபரனன்றி தீவினை நாகநிரயங்க ளாருயிர், நாசபவபந்த
விடெனு ஞானமவமென்று மாம்வழி, தேடுபொருள்
கொண்டுநாரியர் சீரடிபொருந்தல் வீடிது, தேவர்குருவின்
றன் வாய்மொழி தேறுமெனநின்ற பேய்சில. (ச)

நாதனறிவென்று மாமறை நாலின்முடிவெங்கு மோதிய
ஞானநெறிகண்டும் வீடுற நாளுநினைவின்றி நீள்வினை
வேதநெறியென்று மீள்வறு வீடுபிறிதின்றி வானக
மேவுமிதுவென்று நாடொறும் வேள்விசெய்கின்ற பேய்
சில. (ரு)

ஆனவுடலிந்தி யாதிக ளாகுமெனபுந்தி மானக
மாருயிர்கள்பந்த வீடுக ளாதியிறைவென்ற போதமும்
வானமுதலைந்துபூதமு மாசுர்முதல்வந்த யோனியும்
வாழுமயனண்ட கூடமு மாயைமெயன நின்றபேய்சில. (சு)

ஆழிவளைகண்ட தேகுறி யாகவிழிகின்ற சாதிக
ளானுமவருண்ட சேடம தார்வமுடனுண்டும் வேறில
னூழியுலகுண்ட கோன்முழு தாகுமெனுமின்ப மார்குரு
கூரன்மொழிகண்டும் வேறுற வோதிமயல்கொண்ட பேய்
சில (எ)

நாதனருள்சண்பை யான்மறை ஞானமுனிபண்டு பாடிய
நாலுமறையந்த நீதியை நாடிநெருங்கின் மானிகழ்
பேதமதுகண்ட போதநி பீதியெனநின்ற தாமொரு
பேறுமிழவுங்கொ ளாமிகு பேதமறைகின்ற பேய்சில. (அ)

ஆதிமறையந்த நீதியை யாயவறிகின்ற போன்முன
மாயவறிவின்மை யால்வரு மாகதிசைநின் றனேகமு
மோதுபரனென்று வீடுறு மியோகதிசையின்க ணேகமு
மோதிமறையெங்கள் பாலவி ரோதமெனநின்ற பேய்சில.

ஆழியுலகங்கள் வீடுற வாரணம்விளங்க வோதிய
வாதிபிறைசந்த்ர மௌலியை யாடலதுகண்ட கோமளம்
வாழிசகதண்ட நாயகி வாழியெனவின்ப மாமகிழ்
வாசகநறவுண்டு தாமதிமீறிவிழுகின்ற பேய்சில (௯௰)

மேலிரவிபிந்து சேய்புதன் வியாழன்வெள்ளிமந்த னீராறு
மேடமுதல்வந்த ராசியை வேறுபடலின்றி நாளொழு
நாவில்வருகின்ற வாறுக ணுசநிகழ்சிந்த ஞுதிக
ஞுடியறைகின்ற சோதிட நாளுமறைகின்ற பேய்சில. (௯௰௧)

வேறு.

முனிக்கண மெலாமனிதர் பந்தமுற வீடுபெற
மூலமிது வென்றுபகரு
மனக்கடவு ளானசெழு மதிமொழிய வேறுபார
வத்துவில தென்றசிலபேய். (௯௰௨)

விண்ணவ னியானவையும் விளங்குவது மற்றவ
னெழுந்தருளின் மேவுமுயிரின்
கண்ணவ னலாதுபிறி திலைகதி ரோனலது
கடவுளில தென்றசிலபேய். (௯௰௩)

மாலய னுருத்திரன் மகேசுரர் சதாசிவரு
மற்றுமுள தேவருமெலாங்

காலவச ராயழித லாலழிவி லாமனுள
காலமிறை யென்றசிலபேய். (ருச)

யாவருல கத்துவினை வெல்லவுரி யாரமரர்
யாவரு மிறைஞ்சுமொரு மூத்
தேவரு மொழித்திலர்கள் செய்தவினை யன்றியொரு
தெய்வமில தென்றசிலபேய். (ருரு)

அந்தர மியங்குநரும் வருவரரி யாளிபர
வாதிகளு மஞ்சுமுலகு
மந்திர வசத்திறைவ ரென்பதுவு மற்றதனை
யென்றுமய லுற்றசிலபேய். (ருசா

முத்திதர வோதுமிரு முச்சமய நூலுமறை
நாலுமுழு துந்தருவதாஞ்
சத்திதரு மந்திரமு மெய்பொருளு மாகுவது
சத்தமென நின்றசிலபேய். (ருஎ)

வேறு.

வழுத்தித் தற்பசி யாற்கவி பாடுநர்
வழுச்சொற் சொற்றறி யாத்தன மோதுதற்
கெழுத்துச் சொற்பொரு ளியாப்பலங் காரமென்
றிவற்றைக் கற்றிறு மாப்புறும் பேய்சில. (ருஅ

படித்துப் பற்பல நூல்களுந் தாமுறு
பசிக்குக் குத்திர ராயிரந் தார்கையிற்
பிடித்துப் பிச்சையி டாரகம் போயவை
பிதற்றிப் பய்க்கழு ணுலரும் பேய்களே. (௰௯)

வேறு.

ஊழைக் கழியச் சிலகா லமிருந்
துண்ணாக் கருதாற் றுடலத் துளவங்
கூழைக் குமிழிட் டுருகந் ததனைக்
கும்பித் துவிடுஞ் சிலகூ ளிகளே. (௨௰)

கடவா ளரிகோ முகம்வீ ரமலர்க்
கமலம் மயில்பத் திரகோத் திகருக்
குடவா தனமென் றிருகை யொடுகால்
கோணப் பழகுஞ் சிலகூ ளிகளே. (௨௧)

தீதர் மலமென் றுணரா துடலைச்
சேமிப் பனவதா னதினு வலசிக்
கோதா மலமும் மெனநல் லறிவோர்
கூறத் திரியுஞ் சிலகூ ளிகளே. (௨௨)

மூலந் திகழுங் கியுருக் கவிழு
முடிசே ரமிர்தத் துளிமுத் தொருசெங்

கோலந் திகழ்தந் துவினுற் றடைதனக்
கோள்கொண் டயருஞ் சிலகூ ளிகளே. (௨௩)

தோயத் துலவச் சுடுவெங் கனலிற்
றோயச் சுரர்சா திகள்போ கிபவா
காயத் துலவக் காயத் தைவிடக்
காயத் தினுறக் கற்குஞ் சிலபேய். (௨௪)

ஆடம் பரமா மறுமைத் துணைபா
மரனைத் தடகத் தொழியப் புறனே
வேடம் பலகொண் டுநடித் துழலும்
வேதா ளகணங் கள்விதம் பலவே. (௨௫)

வேறு.

கடிய வாய வினைபல கத்துவ
கொடிய வாயன கொள்ளிவாய்ப் பேய்களே. (௨௬)

ஆக ௱௬௬.

---

தொழில்.

ஏது கோடி யளவென் றிப் பேய்களுக்
கோது கோமிவற் றின்செய லோதுவாம். (௧)

வேறு.

அமையக்கற் பதுவிட்டுச் சிலதர்க்கித் தமையாச்
சமையக்கத் ததுகத்தித் தலைமுட்டிக் கொளுமே. (௨)

பொருதர்க்கப் பரபட்சச் சமயத்தைப் பொரவே
விருதிட்டுப் பொருதிட்டுத் தனைமெச்சிக் கொளுமே (௩)

சயமுற்றப் பொருண்முற்றத் தமிழிட்டுச் சொலவா
ரியமிட்டுச் சொலவொட்டொட் டெனவட்டித் திடுமே (௪)

சொனவத்தத் தினைமுட்டத் தொடரக்கெட் டினையான்
வினவத்தட் டிலதைக்கத் தெனவெட்கிச் சொலுமே (௫)

உனதர்க்கப் பொருள்பத்தெட் டுளதட்டிப் படியே
யெனதர்க்கப் பொருளிற்றட் டிலமுத்திக் கெனுமே. (௬)

பரிசுத்தப் பொருளைத்தத் துவநித்தத் துவமே
துரிசற்றுக் கெடுமித்தைத் துணிசித்தத் தெனுமே. (௭)

தலையிற்சொற் கடையிற்சொற் பொருளொக்கத் தழுவா
மலைபச்சொற் கெட * வத்தத் தினசொற்கட் டிடுமே.

துணிவுற்றத் துவிதத்தைத் துவிதத்தைச் சொலவே
பணிவுற்றுத் தணிவற்றிப் படிதுக்கப் படுமே. (௯)

குந்தர்க்கத் தினிஃவெற்றிக் கொடியிட்டுக் கொளுமே
யொருதர்க்கக் கழுதைச்சொற் றெருதர்க்கக் கழுதே.

தெரிசித்துப் பரிசுத்தப் பொருள்சித்தத் துதவா
தெரிசித்தத் தொடுதர்க்கித் திடும்ற்றிப் படியே. (௧௰)

வேறு.

அறவுரைக ளவையெனவு மிவையெனவு மலகையுட
னலகையிகலிற்

* வத்திப்பன எனவும்பாடம்.

செறவுரைசெய் பலகலையி னெறியினுபர் கருணமுடி
செவிடுபடுமே. (௧௨) ஆ ௱௯௩)

தொழின் முற்றிற்று.

---

உவமை.

கன்றின வுளத்தொடு களத்தினி னரம்புகள்
பரம்பவமையா
தொன்றினுரை யொன்றுரைசெ யாதகலை யோதலை
கை யொரப்புரைசெய்வாம், (௧)

வேறு.

நன்னலத்தபர ஞானநிற்கவினை
நல்லறப்பயனை நச்சுபேய்
கன்னலைக்கழிய விட்டதற்றகழி
கோதுகொள்பவர் கடுக்குமே. (௨)

உட்கிடந்தமல னெழிவுறுதுபுனல்
கொண்டுடம்புகழு வுற்றபேய்
மட்குடந்தனின் மலத்தைவைத்தது
புறந்துடைப்பவனை மானுமே. (௩)

அறங்கொணெஞ்செழிய வலகை யன்பினொடு
கட்டுகின்றவுழ கார்மடம்

புறங்கொள்செஞ்சடை யகங்கொள் காமவெரி
போதருந்தகைமை போலுமே. (௪)

தன்னினூன்றிய நின்றமானமலை
கொண்டுதன்னதுரு நாடுபே
யுன்னினுவமை பாதவங்கொடெரி
பாவகற்சுடுத லொக்குமே. (௫)

துதித்தலென்குருவும் யாமுமோரறிவ
தாகுமென்றுவினை சூழவே
மதித்தபேயுதவு நன்றிகொன்றவள
வற்றபாதகனை மானுமே. (௬)

கள்ளையுண்டுமுன் புள்ளபோதமு
மிழந்திடுங்கழுதை கையின்முன்
புள்ளதுங்கெட வவாவினாலிரத
வாதமுதுபவ னொக்குமே. (௭)

அருந்தலும்புணர்வு மாதரித்துழலு
மலகைவலையுரிடு கண்ணியிற்
பருந்தின்வாயரவின் மண்டுகங்கொள்சிறு
பறவைநுகர்நறவை யொக்குமே. (௮)

பந்தமுத்திபெற வொருவரின்றிவரு
பவமறுக்கமுயல் வுற்றபேய்

வந்தைபெற்றமக னுற்றநோய்விட
மருந்துசெய்பவரை மானுமே. (கூ)

ஒன்றுபல்பொரு ளநித்தநித்தமு
முள்ளதில்லதுரு வருவமா
மென்றுசொல்லலகை தெளிவுவல்லிருளி
னிருளையிட்டதிணை யொக்குமே. (0)

வேறு.

போதமா யகண்டமான பொருளதொன்றை யெண்ணில்பல
பேதமாக்கு மலகையெண்ணில் பிரமகாதர்போலுமே (கக)
தன்னொழிந்து வேறெனச் சகத்தைநாட லுற்றபேய்
பொன்னொழிந்து பூண்விரும்பு போதகனைர் போலுமே.
எதிர்நிகழ்ந்த துண்டலாத தில்லையென்றி யம்புபேய்
கதிரையில்லை யென்றியம்பு கண்ணிலாள னொக்குமே. ()
இடும்பையோடு சுற்றமுற்ற வின்னறீர்க்க நின்றபேய்
குடும்பிகோபு ரஞ்சுமந்த கூனுபாவை மானுமே. (கச)
வேறு.
இக்க ளேபர நிற்கவி யற்றுபேய்
மொக்குள் பூண்கட்டு மூர்க்கனை யொக்குமே. (கரு)
வேறு.
அகலி டத்துள தீங்கெலா மவற்றினுக் கணுவாம்
புகல்வ தென்கொல்பேய்க் கழகுபொல் லாமையேயன்றோ.

பேதமன்னுபூ தங்களின் பெருமைபார் சொல்லும்
பூத மைந்தையும் பெற்றது மவற்றிரேனார் பூதம். (கஎ)
ஓத வெல்லையுண் டாதலி னுய்ந்தில வலகை
போத மெல்லையி லாமையின் மெலிந்தன பூதம். () ஆ. ௩௬௬

---

விச்சை.

எக்க ணங்களு மெத்துதி யுங்கொடு
தொக்க ணங்கினைச் சூழ்ந்தடிபோற்றவே. (க)

உம்ப ராதிப ராமும்பர் கைதொழ
வெம்பி ராட்டி யிருந்தரு ளெல்லையில். (உ)

விச்சை யாவையுங் கற்றவிச்சாதர
ரிச்சை யாம்பர விச்சையை நெஞ்சிலே. (௩)

ஆய காலமி துவென வங்கொரு
பேயை வாவென்று பேய்த்தனம் போக்கவே. (ச)

வேறு.

ஆணுடன்பெணலி யாயுடம்புக
ளநந்தமாய்தனி லொன்றினெண்
சாணுடம்பினள வாவிருந்தநின்
றன்மைபாரதனி னன்மைபார். (ரு)

மடக்குமாறுமிகும் வானவர்க்குமரி
தாயறக்கடிய வாயுவிற்

கடக்குமாமன னடங்கல்பாரஃ
தடங்கிநின்றதொரு கருமைபார். (சு)

புக்கபூமிதொர் யாதவாறுமுன்
னிடங்கணின்றபுரை யொன்றிலா
மிக்கபேரிருளொளிக்கஞானநல்
விளக்குவந்துகண் விழித்தல்பார். (எ)

விழித்தியாவையும் விழித்திமைத்துல
கமைத்தளித்தகில மீளவு
மழித்துமூவர்களு மாகிநின்றவது
வாதல்பாரதுவ லாமைபார். (அ)

இட்டதீபமு மிலங்குமெய்பொருளு
மெண்ணும்யாவைகளு மின்றியே
விட்டதீயென விளங்குமாறுமற
விட்டிருந்தவொரு விரகுபார் (கூ)

களிக்கயாவையு மிறந்ததென்றனு
மிறந்ததோர்கரிய கங்குல்போ
யொளிக்கயாவையு முணர்ந்துநின்றபர
மானவொண்கதி ருதித்தல்பார். (ய)

எண்ணவாருமிசை யாதலண்டசத
கோடியுந்தாமு னேதுவரம்

விண்ணை பாதிவரு பூதமைந்தினையும்
விழியினாது விழுங்கல்பார். (௧௧)

காட்சியாவுமொரு கண்ணதானபடி
யார்கவின்பெற விருந்ததோர்
மாட்சிபார்வசன மானகோசர
மலர்க்கையுற்றமணி யாதல்பார். (௰௨)

மறப்புமின்றியொர் நினைப்புமின்றிமலர்
வதுவுமின்றிமலர் வற்றதோ
ரிறப்புமின்றிநிக ரின்றியிப்பொரு
ளிருத்தல்பாரென வியம்பவே. (௧௩)

அலகையாயுழலு மென்னையேயுள
வனந்தவின்பவழி வாக்கினை
யுலகையார்தமி னொருத்தனமென
வுனைக்கருத்தினி னினைப்பதே. (௧௪)

முன்னையானெனது கண்டிலேன்மொழி
யிறந்தவின்பவழி வாயினே
னென்னையானினி வியப்புமாறென
விறைஞ்சிநின்றவனை யேத்தியே. (௧௫)

இந்தவிச்சையுல கத்திலியாருள
ரெனக்குநின்றிரு வுளத்தினால்

வந்தவிச்சையென வவனுநாயகி
மலர்ப்பதங்களில் வணங்கவே. (கக)

அன்னையாதாவி னோடவன்றலையி
னம்புயப்பத மளித்துவந்
தென்னையாளிபர விச்சைவல்லவனை
யாவரும்பணியி னென்னவே (கஎ) ஆ உாஅ.

---

பேயிரங்கல்.

விச்சைகண்டவர்க டொழுகைகண்டில
மிகப்பசித்துவிழி சுழலுவேம்
பிச்சைகொண்டுணவு மிடுகிலார்களிவை
பேய்களென்றிகழ்வு பேசியே. (க)

அண்ணலாரடியர் கொண்டநல்லவற
வேடமாகுமவை கொண்டியா
முண்ணலாமென நினைந்துகொண்டன
மறிந்துகொண்டதிவ் வுலகமே. (உ)

எந்நிலங்களும் வளர்ந்தவேழ்கடலு
மெப்பொருப்புமுள யாவையுந்
தின்னினும்பருகி னுங்கெடாதுபசி
யென்னருந்திபிநு தீருமே. (ங)

வேறு.

தாகமோ கர்திலெலாந் தணிக்குமொரு தனிமருந்தின்
ரீகமா முணர்வென்ப ரெங்கள்கணிற் காண்கிலமே. (௪)

அந்தவொரு மருந்தினைப்பெற் றநந்தமர் யிரத்தொருவ
ருய்ந்தவருண் டிலையென்ன வோதுவதும் வேதமே. (௫)

மகனாரைப் பெற்றமறை வல்லவரும் பெற்றிலார்
சுகனார்பெற் றனரென்று சொல்லுவதும் வேதமே. (௬)

அப்படியே யரியபொருள் பெறுமவரா ரலகைகளா
யிப்படியே யிப்படியிற் றிரிகின்ற யாங்களியார். (௭)

கற்றெல்லை யறப்பிதற்றிக் கண்குழிந்து கடைகடொறுஞ்
சற்றல்ல யாம்பசித்துத் தடுமாறுந் தடுமாற்றம் (௮)

மழித்துநீட் டியும்பறித்தும் வற்கலைகள் பலபுனைந்து
மொழித்துங்கோட் டிகள்கொண்ட தெத்தனையா முண்ண
[ வே. (௯)

கருக்கெடுப்போ முங்கலைநாங் கழல்சூட்டி யென்றுபோய்க்
குருக்கொடுப்போ மெனிற்கண்டு குதித்தோடிப் போவர்
கனே. (௰)

பேசிலோ வல்லவாய்ப் பேயென்பர் பேசுதற்குக்
கூசிலோ வூமனெனக் கொச்சையெனக் கூறுவரே. (௧௧)

துதிப்பாரைத் துதிப்பதுவுந் துதித்தாலுந் தம்மையவ
மதிப்பாரை மதிப்பதுவும் வயிறுசாண் வளர்த்தற்கே.

மிகையாகும் பகையிதனில் வேறுண்டோ வுற்றவரும்
பகையாகப் பண்ணுவதும் பாழ்வயிறே யல்லவோ. (கரு)
இந்தவயி றேபெரிய தேழ்கடலோ பெரியதுதான்
வெந்தவயிற் றுள்ளெரியோ வேலையினில் வடவெரியோ
வந்தனைசெய் துனைவாழ்த்த வைத்தருளாய் வயிற்றினெரிக்
கிந்தனந்தே டிச்சுழலப் பண்ணினை யெங்களையே
உட்லெழுசா ணுப்பண்ணி யொருசாணு மொழிப்பதற்குக்
கடலுலகி னுடலமெலாங் காண்பானைக் காணிலமே. (கசு)
பிழைத்தக்காற் பொறுத்தருள்கை பெரியோய்நின் கடனன்றோ, யுழைத்தக்கா லடியோங்க ளுனக்குறுதி யுரைத்தருளே. (கள) ஆ உஉரு.

வேறு—கனவு.

எனவிளைப்பெ லாம்விளம்ப யிரவுகண்ட தொருகனா
நனவெனத் திகழ்ந்ததென்ன வொன்றுநின்று நவிலுமே.
இமைத்ததோர்க ணில்லையோவொ ரெல்லையற்ற வல்லையிட்
டமைத்தவோர் மகாந்தகார நின்றியா னழுங்கவே (உ)
விட்டிலங்கு தீபமேற் றிசைக்கணே விளங்கவோர்
மட்டலங்கன் மார்பினொ ருத்தன்வந் திருக்கவே. (ங)
எல்லையற்ற வன்பதம் பணிந்தியா னிறைஞ்சவே
தொல்லையுற்ற வன்பரென்னை யாளவென்று சொல்லவே. ()
புலன்களிப்ப வந்தசெய்ய பொற்பதங்க ளன்றியே
நலன்களிப்ப தென்னையென்று நான்மிகக் களிக்கவே (ரு)

தேனுமிக்க பாலுமென்ன நின்றுதித்தி யாவென்முன்
மோனமுத்திரை தன்னிலே யிருக்கவந்த மூர்த்தியே. (௬)
மெய்யெனு நலந்தொடே விழித்ததென் கணிப்பய
னையைநாடி யருளுகென்ன வறியவோது மன்னையே (௭)
அந்தகார மோர்கனின்னை யாளவந் திருந்தவ
னெந்தைகார ணன்ப்ரகாச ஞான மிட்டதீபமே (௮)
மோனமா யிருந்ததன்மை மொழியிறந்த வின்பமெய்ஞ்
ஞானமா யிருந்தவேறி லாததன்மை நாடவே. (௯)
மேற்றிசைக்கண் வானவர்க்கு மேலனாக லாலுடன்
போற்றிசைக்கு மன்பர்பாத முற்றபுண்ணி யத்தரே: (௰)
கருத்தினு டொணாததெவந்தை கண்ணினுட மண்ணின்மே
லொருத்தனாகி வந்தளிப்ப னென்றுவேத மோதுமே. (௧௧)

வேறு.

மரணமும்பிறப் பும்மறு மாமணி
காரணமெல்லாங் கடந்த கடவுளே. (௧௨)

வினவி வந்துநீர் வேண்டிய தேதரும்
கனவு மூந்துறுக் காரிய மில்லையே. (௧௩)

என்ன வன்னை யிறைவி மறையெலாஞ்
சொன்ன வன்பிற வாளென்று சொல்லுமே. (௧௪)

விண்மு தற்பொரு ளெல்லாம் விளைப்பவன்
கண்மு தற்புலன் காண்டற் கரியனே (௧௫)

முந்தை மூவர்க்கு மூலமு னிவர்தஞ்
சிந்தை யானுந் தெரிதற் கரியனே. (கசு)

வரவு போக்கற்ற வான்பொரு ளென்றுமுன்
பரவு மாமறை யெல்லாம் பகருமே. (கஎ)

முடிவு மாதியு மற்ற முழுமுதல்
வடிவ மாகி வரும்படி யெங்ஙனே. (கஅ)

சொல்லு கோலஞ் சுருதிவி ருத்தமோ
வல்ல வோவென வன்னை யருளுமே. (கசு)

அருவ னுகினு மன்பர்க் குருவனுப்
வருவ னென்றது மாமறை காணுமே. (உ0)

பத்தி யாம்வலை யிற்படும் பார்மிசை
புத்தி யாலறி யொண்ணுப் புராணனே. (உக)

தேவி யிப்படிக் கூறத்தி ருவருள்
பாவி யேற்கில தென்றுப தைக்கவே. (உஉ)

ஆ. உசஎ.

---

சசிவன்னபோதம்.

அலகை யச்ச மறவகி வர்ன்கள்
மூலகின் முத்திபெ றும்பரி சோதுவாம். (க)

புணர்ந்த பர்வமெ லாம்பரி பூரண
முணர்ந்த ஞானி விழிபட வோடுமே. (உ)

வேறு.

எழிலாரு ஞானி புகழென்னை கூற
வுயர்வீ டிவன்சொல் வழிசெய்
தொழிலாளர் சேர்கை யதுகேளு முன்னை
யிதிகாச மொன்றுசொலவே. (௩)

தந்தாப மற்ற பரனேவல் செய்த
வவனுற்ற பேறுதனைமுன்
செந்தா மரைக்கண் முதல்வர்க்கெம் மண்ணை
திருவாய் மலர்ந்த திதுவே. (௪)

உவமிப்பின் ஞானி விழிபட்டு முன்னை
வினைவிட்டு முத்தியுலகிற்
றவமற்ற வெய்ய வினையே புரிந்த
சசிவன்ன னெய்துகதையே. (௫)

வேறு.

ஏமம் புகுவா ருளபா தகரா
மியாவர்க் குளுமிக் கவனு குமிவ
னுமம் புகல்வார் குலமும் மெரிவாய்
நரகம் புகுமா றுநடந் தனனே. (௬)

மலமே மியதீ வினையின் வலியால்
மகிழும் பர்பதத் திலிருந் தவிவன்

# மோகவதைப்பரணி.

குலமே வியதென் புலவா ணர்களுங்
கொடிதா நரகங் குடியே றினரே. (௭)

மிகமே வியபுண் ணியபா வமெனும்
வினையின் பயனே லொருகா லுமுறு
திகமே வருமென் பதனு ளுளநோ
யெல்லா மிவனைச் செறவெய் தினவே. (௮)

தன்புத் திரனை யம்விடா மையினாற்
றவறுற் றவிவற் பெறுதந் தையுளந்
துன்புற் றினியென் னைகொலோ புதல்வன்
றுயர்தீர் வகையென் றுசுழன் றனனே. (௯)

ஒன்று லும்வினைத் துயர்துய்ப் பதலா
லொழிவிக் குமுபா யமுனக் கிலதே
யென்று லுமறிந் தவனன் புவிடா
திவனைக் கொடுழன் றனனெங் கணுமே. (௰)

ஒருமா தவன்மற் றிவன்வே தனைகண்
டொழிவற் றுளவொன் றையுளத் துணரும்
பரமா கியஞா னிகள்கண் ணுறலே
பரமௌ டதமென் றுபகர்ந் தனனே. (௰௧)

தானந் தமிலா ததனைத் தருவான்
சத்தீச் சுரமென் னுமிடந் தனில்வாழ்

மாணந் திபரா யணமென் பவனின்
மைந்தர்க் குறுநோய்க் குமருந்தெனவே. (௰௨)

முடியா வுபதே சமிதென் றவனு
முனிவன் பதமெய் திமொழிந் தனனிக்
கொடியான் வெருவா துகுயிற் றியநோய்
கூறற் கரிதா யகொடுந் தொழிலே. [௰௩]

ஈங்குன் றிருமுன் பகரும் படியோ
விவனெய் தியதீ வினையென் னவெலா
நீங்கும் படிதன் னனுபூ தியினு
னிகழும் விழிவைத் தனனின் மலனே. (௰௪)

கணியா தபவக் கடுவா னதிருக்
கண்வைத் தலுமிட் டளகா துகடும்
பிணியா வையுநல்ல பிதா வினிறைதாள்
பேணிப் பணியென் றுபெயர்ந் தனனே. (௰௫)

இடனே முதலா கவுவந் திறையோ
னேவும் பணிசெய் திவனுஞ் சிலநா
ளுடனே யிவனே திருமே னிதனக்
குரியா னெனவுற் றனனும் பனோடே (௰௬)

நன்று முனிதாள் வழிபா டதனு
னுவிதமா னபிறப் பினைவிட்

டொன்று கியவீ டுணருத் தமர்கட்
குள்சா தனநா லுமுதித் தனவே. (௰எ)

முனிவன் றிருமுன் புளதன் குறைதான்
மொழிவன் சிலவஞ் சலிகுஞ் சியதாய்ப்
பனிவந் திருகண் கள்பதங் களிலே
பலகால் வலம்வந் துபணிந் தனனே. (௰அ)

அருளே வடிவா கியமா முனிதா
னறியா தவர்போ லவமுங் கலுழும்
பொருளே தெனமைந் தனடுங் கினனிப்
பொல்லா தபவப் புணரிக் கெனவே. (௰கூ)

வெருவும் பிறவிக் கடல்வித் தரமுன்
வேதா கமகீ தைவிளம் புமதைக்
குருவுந் தனதன் பன்மனத் தளவிற்
கொளுமா றுதொருத் திதுகூ றிடுமே. (உ௦)

வேறு

மரண பவங்களான புனலை யுடையது
மதியை விழுங்குகாம வரவு பெரியது
கரண வெரழுங்கறுது விடய விரை நுகர்
கணமொ டியங்குமீன மிகவு முகள்வதே. (உக)

பெருமித மென்றுகூறு பெருமை யுடையது
பிணிகளொ னுங்கெடாத புலவு கமழ்வது
வருமிட ரின்பமான திரைகள் பொருவது
மனமெனும் வஞ்சராஜ மகர முறைவதே. (உஉ

அளவி லகந்தை யாமை யபரிமிதமுள
வவாவெ னிறைந்தவாழ மறிய வரியது
களவு நெருங்குபாரு மலையு முடையது
கஃக விடங்கண்மேவு சுருமி நெளிவதே. (உ௩

துகளொனு நன்கலாத நுரைக டருவது
துறவினி னின்பமான கரையை விடவகன்
மகளிரொ னுந்தவாத வலிய சுழியது
மறலியு மஞ்சுகோப வடவை யெரிவதே. (உச)

வெருவரு கின்றபோக முதலை யுடையது
விவித மனந்தமான துறையு மறிபவ
ரொருவர் கடந்துபோக விரகி லெழுபவ
வுததி விளம்பயாவ ருலகி னறிஞரே. (உ௫)

பொறிவழி சென்றுமீளு மவல மகிகொடு
பொருசம யங்களாறு மறியவி ழுமதி
லறிவழி யொன்றிலாத பொருளெ தெனவுள
வனுபவ வங்கமேறு மறிஞ ரகல்வரே. (உ௬)

புணரி கடந்துபோக விரகி லெனமொழி
பொழுது புலம்பியாவி புதல்வ னிறு முன
முணர்வெனும் வங்கமேறு மறிஞ ரதல்வரென்
றுரையை வழங்கிநாத னுவகை யருளவே. (உஎ)

வேறு.

வாழியென விறைவனடி தொழுதுவரு பவமா
மாழியினை யகலுமறி வருளுகென வவரே. (உஅ)
பரவறிவு மபரவறி வெனவுமிரு பரிசாத்
திரவறிவை யறியுமவர் மொழிவர்தெளி வுறவே. ()
அபரவுணர் வருமறைகண் முதலகில கலையு
முபரமம தறவுதவு முணர்வுபர வுணர்வே. (௩௰
ஆகமவி தங்களறி வாரபர மறியார்
யோகமொ டிறங்குமவ ரேபர முணர்ந்தோர். (௩க)
புராணமிதி காசமெவை யும்பொரு ளனைத்தின்
பிராணனறி யாதுள விடத்திவை பிதற்றே. (௩உ
இயலறிவ திசையறிவ தினமறிவ தாளதா
மயலறிவ தறிவதல வறிவறிவ தறிவே. (௩௩)
நவிலுகலை யறுபத்து நாலுமுணர் வாரும்
பவலயம தறுசுத்த பரமமறி யாரே. (௩௪)
ஆகவறி வாளரறி வாரிவை யனைத்து
மேகவறி வாளரிவை யாவுமறி யாரே. (௩ரு)

ஐயறி வறிந்தவை யடங்கினவ ரேனு
மெய்யறிவி லாதவர்கள் வீடது பெறாரே. (நகூ)

மெய்ம்மையறி வல்லதமில் வேறறிவ தெல்லாந்
தம்மையறி யும்மறிவ தேயறிவு தானே. (நஎ)

பூசனையு மதுசகல பொருளுமறி தமையு
மீசனையும் வேறதற வறிவதறி வெனவே. (நஅ)

தானெனு முடம்பது தனைத்தவிர வேறு
யானெனு மருத்தமுள தோவருளு கெனவே ()

வேறு.

எனதாடை பொன்பூ மகன்மையல் பாய்மா
விபங்கண் முகங்கால்கை மெய்யென்ன வென்றுந்
தனதா யுரைப்பான் வகுத்திந்த வூனைத்
தானென் றயர்த்துஞ் சொலத்தக்க தன்றே. (சo)

தாளாக வாராழி யாவெங்கில் வீணு
தண்டாக வன்மார்பு தட்டாக மொட்டா
நாளாமலர்ச்சென்னி கூந்தற் கொடித்தேர்
நாணாளு மூர்வானில் வேறாக நாடே. (சக)

கடக்குஞ் சரம்பண்ணி யுண்ணின் றொருத்தன்
கைபார்த கன்னங்கள் மெய்போ லியக்குங்
கிடக்குங் நடத்தா விடத்திவ் வுடம்புங்
கிடக்கும் மொருத்தன் னடத்தா விடத்தே. (சஉ)

ஒருகூறு மலமாகு மொருகூ றுடம்பாகு
மோர்கூறு மனமாகு முண்டற்ற வன்ன

மிருகூறு நீயாகி னொருகூறு நீயா
மிழிக்கும் மலஞ்சோ ரிடப்பட்ட வுடலே. (௪௩)

இளரா தரத்துண் ணுமன்னஞ் சுடக்கை
கிட்டப் பொருதே யிருந்தார் முனிந்தார்
தளரா துறப்பொன்று முயிர்போக வன்றே
தழற்பள்ளி மீதே துயின்றார் சகித்தே. (௪௪)

நிழற்பாவை கண்ணாடி யிற்பாவை நைகா
னிமிர்க்கும் முடக்கும் மிவன்செய்பு மெல்லாந்
தொழிற்பால வாமற்றிவ் வுடலஞ்செய் தொழிலுஞ்
சுடர்ஞான வடிவான வன்செய்த தொழிலே. (௪௫)

அறிகின்ற பொருளென்று மறிவானில் வேறே
யாணுஇவ் வூனகா னென்ன லாமோ
செறிகின்ற புள்ளல்ல வேகூடிவ் வகையே
செடமான வுடனின்னில் வேறென்று தெளியே. ( )

நிலனுகும் வற்பென்ற னெகிழ்கின்ற நீரா
நெருப்பா மிதிற்சுட்ட வெல்லாமு மனிலஞ்
சலமான புரையான வானிந்த வுடலஞ்
சடமான வைம்பூத வுருவங்க டாமே. (௪௭)

விழிமையப்பு மானென்னில் ரவியாதி யாலே
விளங்கின்ற தல்லால் விளங்காமை யாலே
யொழிப்பப் படுங்கன்ன முதனூலு முன்ற
னுருக்கண்ட கண்டன்னே யொப்பாக வுன்னே. (௪அ)

வேறு.

அழலுண்பொருள் களினுண்பவை முக்கூறதின்
றணியென்பு நடுக்கூறது மச்சைக்கணி யாகு [முற்கூ
மெழில்கொண்ட கடைக்கூறது வாக்காபெறு மேன்
யெழிஞண்மறை யந்தங்க ளிசைக்கின்றன வாமே [றே

உண்ணும்புனன் முக்கூறதின் முற்கூறுவர் நீரா
மூத்திரநடு விற்கூறு கடைக்கூறு பிராண
னெண்ணும்பிதி விருகூறவை யீயாயிடி னன்றே
யிறுகின்ற பிராணன்னது யோகுவை யிசையே. (௫௰)

வேறு.

பிராணனு மல்லதுஞ்சி னுணர்வின்மை யாலஃ
துணரும் புலன்களொழிவாற்
பிராணனெ தென்னின்மன்னே யொழியாது சேனை
நகர்சூழ் வலஞ்செய் பொழுதே. (௫௧)

கரண மொடுங்கவாயு நிகழ்வென்கொ லென்னி
னுடல்காவ லாகுமலதேன்
மரண மடைந்ததென்று தமர்சுட்டி டார்முன்
னுளைவாலின் ஞாளிகொளுமே. (௫௨)

இனமுற வெண்ணவுள்ள கரணத்தி லொன்றி
தெனவாவி தென்னதெனலான்
மனமுன மன்னமென்ற வதனாலு மல்ல
மதியல்ல வந்தவகையே. (௫௩)

வேறு.

இடரின் புளதாய் நிலையற் றறிவற்
றெண்ணுங் காரணங் களிலா தெவரு
மடரும் பிறவிக் கடியென் றுணரு
மாங்கா ரமுநீ யலவென் றறியே. (௫௪)

ஐயப் படவோர் பொருணிச் சயமா
யறியப் படல்யா னெனதென் றமதுஞ்
செய்யப் படல்செய் வதுநின் றனையாஞ்
சித்தம் மதுவன் றெனநீ தெளியே. (௫௫)

முன்னு கவுடம் பதுசித் தமதே
முடிவா கமொழிந் தபொருட் டிறடான்
நின்னு நிலநீ யறியும் பொருளாய்
நிகழ்கின் றதனு லென்னின் மலனே. (௫௬)

உன்னு லறியப் படும்யா வையுமுன்
னுருவன் றெனவோ தினையொக் குமெனக்
கென்னு லறியா தொழியும் பொருளோ
யானு குவதென் றனனென் றலுமே. (௫௭)

அறியாப் பொருள்கா ரணமா யைகுறித்
தறியும் பொருள்கா ரியமா முலகின்
நெறியாற் றிகழ்நான் மறையந் தமெலா
நீயன் றெனவோர் துநிரந் தரமே. (௫௮)

அறியும் பொருளன் றறியாப் பொருளன்
றறிவா கியநீ யெனுமப் பொருடான்

பொறியின் வழிநின் றறியும் பொருளோ
போதக் கண்விழித் தறியும் பொருளே. (௫௯)

வேதப் பொருடா னிதுவே றுசொலும்
வினையா னவ்வுமன் றொருவே றுமிலாப்
போதப் பொருளாந் தமறைக் கனியாம்
புனிதப் பொருடத் வமசிப் பொருளே. (௬௰)

வேறு.

நிமலமாம்பர மதுவெனும்பொரு ணீயெனும்பொருள் சீவனே, யமலமான விரண்டயிக்கிய மசிபதப்பொரு ளாகவதே. (௬௧)

அருண்மையாகிய பிரமமுன்னிலை யாகுமாருயிர் பின்னிலை யிருமையசன விரண்ட யிக்கிய மெய்துமாறெவ னென்னவே. (௬௨)

உபாதியால்வரு பேதமேயிவர் பேதமன்றுரு வுயிரினின்
கபாதியாமுடல் போலிறைக்குள காரணாதிகள் காயமே.
ஈசன்முற்றறி வான்வியாபி யெவைக்குமேது வியம்புமா
காசகன்னிரு பாதிபாவனை காரணாதிக ளாவதே. (௬௪)

நீதியாலிரு பாதிநீக்கிட நீயெனச்சொல் பதத்தினு
மாதியாகிய தற்பதத்து மசுத்த சுத்த முரைத்துமே. (௬௫)
ஆகமுன்றிக ழேழுநாளென்ன றும்பதத்தி னசுத்தமே
சோகமின்றிய சான்றுநாளென்ன றும்பதப்பொருள் சுத்தமே. (௬௬)

அகிலகாரண மாகிநாளென றற்பதத்தி லசுத்தமே
சகலகாரண சான்றுநாளென றற்பதப்பொருள் சுத்தமே
செறிந்தகாரண காரியங்கள் சிதைந்தமேனு சித்ததா
யறிந்தவாதனை தானுமற்றதவ் வசிபதப்பொரு ளாவதே.
அசுத்தமாகிய விருபதத்தினு முக்கியப்பொரு ளாகுமே
விசுத்தமான விலக்கியப்பொரு ளென்றுசொல்லுவர் விமல
ரே. (கூக)
முரண்டசீவ பரங்கடம்முடன் முக்கியப்பொரு ளாவதே
யிரண்டின்வேறு சிற்சொரூப மிலக்கியப்பொரு ளாவதே
ஊக்கியப்பர சீவர்தங்க ளுடம்பிரண்டு மிலக்கணு
வாக்கியப்படி நீக்கினொரு வத்துவேபர வத்துவே. (எக)
ஓரில்விட்டதாம் விட்டிடாதது முபயமும்மென வுணர்வு
ளோர், தேரிலக்கணை திரிவிதத்தி னிசைப்பர்மற்ற தியம்
புவாம். (எஉ)
மஞ்சுகூட்டிடு தென்றல்போலவும் வடபகிரதி யுள்ளதே
விஞ்சுகோஷம தென்றல்போலவும் விட்டலக்கணை யாவ
தே. (எங)
சிவலைநின்றது வெள்ளைபோயின தென்றுசெப்புதல் போல
வே, கவலையின்றி விடாதலக்கணை யென்றுநீகொள் கருத்
தினே. (எச)
மேவும்விட்டு விடாதலக்கணை மெய்ம்மையாதெனி லங்க
வித், தேவதத்த னெனும்பொருட்படி சிந்தைசெய்திடு தீர
வே. (எரு)

விட்டலக்கணை தனையும்விட்டு விடாதலக்கணை தனையுநீ
விட்டுவிட்டு விடாதலக்கணை யால்விளங்கு விளங்கவே. ().

போதுமேவிய தேசம்விட்டொரு புருடனைக்கொளுமாறு
போ, லோதுமீருடல் கண்டுவிட்டதி னுண்மைகாண வுணர்
ந்திடே. (எஎ)

வேறு.

பிரியா வுயிர்கா ரியமா முடலும்
பிரமத் துறுகா ரணமா முடலுங்
கரியா கியவா தனையுங் கழியக்
காட்டும் படிகண் டுகொள்கண் ணுறவே. (எஅ)

காணத் திரணிற் பினும்பப் பொருளைக்
காணக் கிடையா தவைகை யறவே
மாணப் படினும் மதுகண் டுகொளும்
வழியில் லையெனும் படிநீ மதியே. (எகூ)

எந்தக் காணங் களுமே வனது
விதன்வா தனையால் விடயங் களொடே
யந்தக் காணங் கள்பொருந் தல்களு
வவைமாய் தல்சுழுத் தியவத் தையதே. (அ0)

வேறு.

வினவிற் பரத்தையறி வுறுதற் கவத்தைபுலன் வினைமாறி
யே, நனவிற் சுழுத்திநிலை வரினப் பொருட்டிகழு நனைக
வே. (௮௧)

துவிதத் தலத்தைகளை யறிவுற்ற வத்துரிய நிலைசிவனை
யிவிதத்தி னப்புருட னனவுற்ற வத்துரிய நிலையீசனை

அகிலக் கரிப்பரம துரியப் பொருட்டுரிய மதுவாகைநேய
புகலுற்ற தத்வமசி யெனுமுப் பதத்தின்முடி பொருளா
வதே. (௮௩)

நிமலப் பொருட்சுருதி நெறியிற் பெறக்கருணை நிதிகூறவே
யமலப் பொருட்பெறுத லருமைத் தெனக்கழறி யடிவீழ
வே. (௮௪)

தமரக் கலைக்களவு தெரிவற்ற தற்பொருள தனையீகுவா
னமரர்க் களப்பரிய பதநற் புனற்கொடுசெய் தபிடேகமே.

பவளத்தில் வைத்தவமிர் தினின்மிச்சி லிட்டினிய பரிவோ
டுமா, தவளப்பொ டிக்கவச மெனவிட் டிடற்பகைக டலைசா
யவே. (௮௫)

உதகத்து டற்பொருளொ டுயிர்கைக்கொ டுச்சிமிசையொ
ருபோதோடே
பதகத்த லத்தைவிட விருகைத்த லத்தொடிரு
பதமேவியே. (௮௭)

ஒழியப்பு லக்கணுப நிடதப்பொ ருட்டெரிய
வுளஞானமாம்
விழியைக்கொ டுத்துமொழி யெனும்ப தப்பொருளும்
வெளியாகவே. (அஅ)

நனவைத்து வக்கிமுடி துரியத்தை முற்றவிறை
நவினீதியே
மனவர்க்க மற்றவனு பவமுற்ற சிற்கன
வலியோதுமே. (அகூ)

புரணமாகவே புறப்புள புலன்களு மந்தக்
கரணம் யாவையும் வழங்கிட நனவெனக் கண்டேன். ()

புரண மாகிய புறம்புள புலன்கெட வந்தக்
கரணம் யாவையும் வழங்கிடங் கனவெனக் கண்டேன் ()

மரண மாகிய திசையிது வெனும்படி மறுதி
கரணம் யாவையு மிறந்துள சுழுத்தியுங் கண்டேன் (கூஉ)

எஞ்ச லின்றியெக் கரணமு மிறந்திருண் டிருந்த
துஞ்ச லற்குணர் போதமாந் துரியமுங் கண்டேன்.

துரிய மாகிய போதமோர் துளக்கமற் றனைத்தின்
கரிய் தாயிருந் திடம்பர னனவெனக் கண்டேன். (கூச)

புணர்ந்த விச்சகத் தொழிந்துணர் போதமாந் தனையே
யுணர்ந்த மற்றது பான்கன வெனும்படி யுணர்ந்தேன்

சான்று சாக்கிய மிறந்திடத் தானிருந் தமையுந்
தோன்று றுவிடம் பான்சுழுத் தியதெனத் துணிந்தேன்

மரித்த தென்றுணர்ந் துரைத்தது மரித்திடந் தனிலே
தெரித்த போதமே ததுபரன் றுரியமாய்த் தெளிந்தேன்

இறையெ னும்பொருட் டுரியமே யென்னையாண் டவனே
மறையி னந்தநற் பதப்பொரு ளனவென மதித்தேன் ()

பண்டை விச்சுவ வாதனைப் பழுதுபோய் முழுதுங்
கண்ட கண்ணதே யாகிய கனவதுங் கண்டேன். (௯௯)

காட்சி யாவையுங் கண்ணதா யக்கணுங் கரைந்த
மாட்சி யாகிய வகோசர முறக்கமாய் மதித்தேன். (௱)

அருந்த வாமறை யந்தமா மகோசரந் தனினீ
யிருந்த வாறறி வித்தவா றெங்ஙன மிசைப்பேன். (௱௧)

எம்பி ரானிடந் தொறுமிடந் தொறுமது வதுவாய்த்
தம்பி ரானடஞ் செயும்வகை சாற்றுமா றறியேன். (௱௨)

ஆவி யேயடி யேன்செய்கைம் மாறுனக் கென்னெனிற்
பாவி யேனது தானுநின் னுடையதாம் பண்டே (௱௩)

ஆவல் செய்தென தாக்கையுள் ளளவுநின் னடியார்க்
கேவல் செய்வதே யன்றிமற் றொன்றுநா னறியேன் (௱௪)

இறவி லெப்பத முட்பெற வேண்டிலே னென்றும்
பிறவி வேண்டுவ னின்றிருப் பணிசெயப் பெறினே. (௱௫)

வேறு.

என்றுபல கால்விழு மெழுந்தொழு மழும்புரியு
மென்னையினியா
னின்றுபல வாகவுரை செய்தவவ னன்பினொடு
நெஞ்சுருகியே. (௯௬)

எட்டினறி வின்றியிறை தன்னிலறி வின்றியிவ் வுடம்பினு
டனே, வீட்டினுறை வானையினி வீடுபெறு மென்பது விளம்
புகிலமே. (௯௭)

வஞ்சவலி யானரகில் வீழ்பிற ரங்கரகு பாழ்படமிகா
விஞ்சைவலி யாலடைய வேறினர்சு ராதிபர்கண் மேலுலக
மே. (௯௮)

தேவரு மனித்தரு மிவன்றொழில் வியந்துரை செயப்படு
வதோ, மூவரும் வணங்கிமுடி யாலவனை தேவல்செய முந்
துறுவரே. (௯௯)

ஞானியை நான்சுர னெனுந்தொழிக ஞாலமுய
நாதனருளான்
மேனியது கொண்டுதனை நல்கவரு மென்றறையும் வேதமு
டிவே. (௱) ஆ. நடுள,

## திருமுடியடைவு.

மூல மான மறைப்படி மூலமே
கோல மான பரிசுகள் கூறுவாம். (க)

வேறு.

தன்னாக நல்க வருளே நிறைந்த திருமேனி கொண்டு தன
தாள், முன்னை தேவ ரொருமூவர் கூட விறையா யிருந்த
முதலோன். (உ)

மாதுற்ற பாகனெனவந்து வெள்ளி மலைமே லிருந்துமறை
நா, லோதுற்ற ஞான வடிவைத் திகழ்த்தி யுலகைப்பு ரந்த
வுரவோன். (ந)

ஆலத்தி னீழ லறநல்கி ஞான
வநுபூதி யாகவழியா
மூலத்தை நாலு முனிவர்க்கு மோன
மொழியால் வழங்கு முனிவோன் (ச)

வெளியாய் விசும்பி னிருண்மாற வந்த
வெயிலோன் விளங்குமுனநா
ளொளியா யுனக்கு மொளியா னெனத்த
னொளிதான் விளங்கு மொளியோன். (ரு)

தேனொத்த தன்ன தநுபூதி தேவர்
குருவைத் தெளிக்க வொளிசேர்

மோனத்திருந்த படியே யிருந்து
மொழிவற்ற வொன்றை மொழிவோன் (௬)

மகனார் தமக்கு மிகநல்கி யெந்தை வருகென்று தந்தைபணியச், சுகனார் திருத்த முறஞான நல்கி யிடர்தனை யொழித்த சுடரோன். (௭)

போராழி யேறி யடலாழி யேவி யருளாது வென்றுபிறவிப், போராழி யேற விசையற்கு நெஞ்ச மிசையப் பகர்ந்த பெரியோன். (௮)

தேனொக்க மன்னு மயிர்தொக்க வேத
சிரமே மொழிந்த குருகைக்
கோனுக்கு வந்து பெருகன்பு நெஞ்சு
முருகக் கொடுத்த குரவோன். (௯)

ஊழிக்க மிழ்ந்த வறன்மேன் மிதந்த வயனிற்சிறந்த மறையோர், காழிக்கண் வந்து சிறுபால கன்க ளுறுமாறு நின்ற கழலோன். (௰)

இல்லூரு வந்த மடவார் தனங்க ளிடர்நஞ்சு தஞ்ச மிறையோ, னல்லூரில் வந்த பதமென்று நாவி னரசன் றுதிக்க நவில்வோன். (௰௧)

இளையாது பூணு மணவாளர் போல
விளமாதர் கொங்கை யிடையே
விளையாட வீடு மிகுசுந் தரற்கு
விளைவிக்க வல்ல விறலோன். (௰௨)

உரைசெய்ய வின்றி யுளமொன்று வந்த
தெனவாத வூர னிருகண்
டிரைசெய்ய நீர்கொ டுரைசெய்ய வன்று
திருவாய் மலர்ந்த திறலோன். (௰௩)

சித்தான வேட மதுகொண்டு செம்மை
மிகுசோதி சித்த வடமா
மத்தான மேவி யறிவான தன்னை
யறிவித் திருந்த வறவோன். (௰௪)

தானந்த மற்ற வருண்மேனி நின்ற
படிநிற்க வன்று தனதா
மானந்த நிர்த்த மறிவித்த தில்லை
நகர்வந் தளித்த வருளோன். (௰௫)

அமரா திபர்க்கு மயன்மா லரர்க்கு
நிகரான வாதி மறையோர்
குமரர் பதிக்க ணொருமேனி கொண்ட
வருண்மேனி நல்கு குரவோன். (௰௬)

நல்லேன முன்னர் வருமங்கை தன்னை
நகரா வுவந்து பிறிவா
மல்லே னெனுமொ லழியாத தன்னை
யொழியாமை சொன்ன வறவோன். (௰௭)

புரந்தார ளுகென்ற மறைவல்ல பூமி
சுரர்சொல்ல நல்ல புகழ்சேர்

பரந்தா ருவந்து பரமாம் பதத்தை
யறிவித் திருந்த பழையோன். (௰௮)

தன்செப்பு மாறில் பதமன்பர் தங்க
டலையிற் பதித்து மதுரம்
புன்செய்க்கண் மேவி யொழிவற்ற தேசு
புகழுற்ற தூய புகழோன். (௰௯)

சீலம் பொருந்து முனிவோர் கணங்கள்
செயவென் றிறைஞ்ச வறவோர்
கோலம் பொருந்தி நலமார் திருப்பை
நகர்வந் திருந்த குரவோன். (௨௰)

புயமாதர் கொங்கை பெறவேறில் போத
கனமான பாத மலர்பெற்
றுயர்மா தவத்த ருலகுய்ய வந்த
விறையாய் வருக்கை யுறைவோன். (௨௧)

பாரார் வருத்த முறுபந்த பாச
மறவந்து பாத மருடற்
கோரார் வருக்கை யிடமா வுவந்த
நடராச னென்னுமிறையோன். (௨௨)

வெருவந்த தொண்டர் கருவெந்து வீழ
நிறையைந்து வேள்வி மறையோர்
திருவிந்த ஞரி லுருவந்திவ் வைய
மகிழ்வித்த செய்ய திறலோன். (௨௩)

ஆனத்தை மாற வுலகன்பர் தன்னி
னருண்மேனி கொண்டு திருவார்
கோவத்தை மேஷி யமுதைச் சுரந்த
கிகர்வேறி லாத குரவோன். (உ௪)

வேறு

அரணிதரு கனலிடுளிர் புரணமொரு காரணமற
வயில்லொரு மொழியருளவே
தரணிவரு சொருபனென திடரகல விருகழல்க
டருகருணை பெரியகுரவோன். உ௫) ஆ ௬௨

வேறு திருவபிடேகம்.

ஆகியழி யாவண்ண மன்பர்க் கெல்லா
மரியதனைக் கொடுத்தருளு மந்தவாதி
யோகிசொரு பானந்தன் மோகக் காய்ந்திட்
டுங்கள்பசி தீர்த்தருள வுள்ளஞ்சென்றே. (க)

குருவடிவ மாகிவந்த சொருபன் றனை
மைந்தனென வேறுமொரு கோலங் கொண்டான்
றிருவருளா லவன்கொண்ட கோல மான
திருவுருவஞ் செய்தசெயல் செப்ப லுற்றும். (உ

வேறு

குருவரு ளொழிந்தறிவு கூடலரி தென்பது
குறிக்கொடுலகந்
திருவருளை நாடும்வகை தன்றிருவு ளத்தினருள்
சென்றருளியே. (௩)

தந்தைசொரு பன்கழல் பணிந்துபிற வாதநெறி
தான்வினவவே
மைந்தனுள மன்புகொளல் கண்டருளி யெந்தையு
மகிழ்ந்தருளியே. (௪)

செப்பரிய வீடருள்செ யத்திருவு ளத்தினருள்
சென்றுமிகவே
ஒப்பரிய வெந்தைபெரு மானுவகை யோடும
துரைத்தருளுமே. (௫)

வேறு.

மாறிலொளி யாய்நிக ழுணர்ந்தவறி வின்பம்
வாய்மைவடி வாகிமன வாசகமி றந்தோர்
வேறில்பொரு ளாயதனின் வேறுபடு பற்றும்
வீடுமில தாகுமது வேதநெறி வீடே. (௬)

கண்ணைமுத லாகியபு லன்களு மியங்குங்
கால்களு மனாதிகர ணங்களு முடம்பும்
விண்ணைமுத லாகவரு பூதமு மனைத்தும்
வேறிலறி வாய்நிகழ்தல் வேதநெறி வீடே. (௭)

கூறுபல பேருடைய வாறுபல வும்போய்க்
கோத்தபர வைக்கவொருத் ÷ தீர்த்தமெனு மா
வேறுபல வானசம யங்கண் முடி விற்போய் [போல்
வேறறவ டைந்தவது வேதநெறி வீடே. (அ)

ஆண்டொரு குலம்மொருப ரிச்சினவு டம்பு
மந்நிய சு கங்களுமி ருந்துதனு மற்றான்
மீண்டொருவ னுந்தவிர வேறுமொரு சூழ்ச்சீ
மேலறநி றைந்துளது வேதநெறி வீடே. (கூ)

காலையிறை தன்றலையில் வைத்தருளு போதே
கண்டுகொள லாயுடலி லையுடலம் விட்டான்
மேலையொரு வீடுபுக வென்றுகரு தாமே
வீட்டினி னிருக்குமது வேதநெறி வீடே. (ω)

ஈடுபடு மிப்பிறவி தீரவிறை யோன்வந்
தெழிற்பத மளித்தினி தியம்புமொழி யொன்றால்
வீடுபெறு மப்பொழுதி னெப்பொழுது முண்டே
வீடென விளங்குமது வேதநெறி வீடே. (ωக)

களங்கவுட லானபொழுதியாவரு முடம்பாய்க்
காணுமது போலொருவன் வீடது முளத்தே
விளங்குபொழு தெவ்வுலகி னுள்ளவுயிர் கட்கும்
வீடுநனி காணுமது வேதநெறி வீடே.

---

÷ தீர்த்தம் எனவும் பாடம்.

வேறு. (௱௨)

காதும்வார்தியர்க டாநினைந்தபடி கட்டுரைக்குமது வல்லவீ
டோதும்வேதமுடி வோதலாநுபவ முற்றஞானிக ளுரைத்
தலே. (௱௩)

நாதனந்திபெற நல்கியம்முனிச னற்குமாரர்பெற நல்கவே,
சூதனன்குற வியாதனேதவவ னேந்தும்வீடடைவு சொல்
லிலே. (௱௪)

ஞானநீதியொடு பெற்றமாதவ ரனேகர் நாளுமள விலேசோ
பானநீதியை யறிந்தினிப்பகரு மாறுதானரிது பாரிலே(௱௫)

வேறு.

உவந்து நாமுனக் கோதிய வீட்டிய
லுபநி டத்தொரு கோடியு ரைக்கிலென்
சிவன்ற ஞானுணர் வுற்றதீ தென்னநற்
றேசி கன்றன் றிருவடி போற்றியே. (௱௬)

இருக ரந்தலைக் கொண்டருள் செய்கென
வேத்து மைந்தனார் கண்ணீர் வரவர
வருக வென்றவர் தம்மி னுருகியே
மகிழ்வி னெந்தை திருவாய் மலரவே. (௱௭)

மல்கு கண்ணினீர் கொண்டிறை மேனியை
மைந்த னாரும்வி ளக்கினர் வள்ளலார் :

புல்கி மைந்தனார் மேனிவி ளக்கினார்
போத மாக வொருகணப் போதிலே. (௰அ)

உத்த மாபர மானந்த நாடுநீ
யுடைய தேயென் றுரைத்தருள் செய்திறை
சுத்த மாநம் பதநின தீதயென் று
தூய பண்டைப் படியை விளக்கியே. (௰கூ)

உவப்பி னாலிவ்வு லகினை யாள்வதற்
குரிமை யிற்றிரு வுள்ளத்த டைத்திறை
சிவப்பிர காசனெ னுந்திரு நாமத்துச்
செய்ய பாத மணிமுடி சூட்டியே. (உ௰)

வேறு

தன்பிறாதியி லாதகோன்முடி யாதிதாண்முடி வாருயிர்க்
கன்பினாருள் கருணைநல்லற மணியுமாபர ணங்களே (உக)

கோட்டமொன்றறு முள்ளமாமலர்
கொண்டுகட்புனல் கொண்டுசெய்
வாட்டமொன்றறு மன்பர்வாசக
மாலையேதிரு மாலையே (உஉ)

ஒன்றுமோதுவ மம்பெருவிறை தந்தவாகம வுபநிடத்
தென்றுமோதுச [illegible] தத்துரி யாசனத்தி னிருப்பவே

வேறு

அவனி யிற்சிவந் தருசி வற்கதிர்ந்
துபநி டச்சலஞ் சலமொலிக்குமே. (உச)

வருபி றப்பறப் பருகி யிந்துவந்
திருபு றத்தினுஞ் சுடரெடுப்பரே. (உரு)

குணங்க ளெந்தைநா மங்கள் கொண்டுதாள்
வணங்கி நின்று நாமங்கை வாழ்த்துமே. (உகூ)

பங்க யஞ்செறு பதநி னைந்துபூ
மங்கை நின்றுபொ ன் மாரிதூவுமே. (உஎ)

தான சக்ரமற் றுயிர்த னைப்பெறு
ஞான சக்ரமெங் கணுந டக்குமே. (உஅ)

மங்கை பாகநன் மகுட மேறும்வண்
கங்கை யாதிவெண் கவரி வீசுமே (உகூ]

வார்க ணங்களு மறைக ளுலுமச்
சுரர்க ணங்களுந் தொழுது போற்றுமே. (௩0)

வேறு.

ஞான கேதனந் தன்னைவ ழங்கிட
நாலு திக்கினுங் கட்ட வவையுமக்
கான கேதமறுக்குமம் பொற்கழ
லடைய வாருமென் றுலித்த ழைக்குமே.

வேறு

ஆருரைக்கவ லாரவன் றன்பத
மப்பெ ருந்தகை யிப்புவி மேவிய
கூறி ருட்டன வாகத்து மோகனைக்
கொன்று நங்கள் குறைதீர்க்கு மென்னவே.

திருவபிடேக முற்றும்.

மோகன்சரிதை

மோக னொருமவ னொரென வவன்றன்வரவு
முனிவ ருய்ந்திட வவன்குல னடங்கமுனியு
மேக னுமிறை யுவந்தருள்வி வேகன்வரவு
மிருவர் செய்தியும் விளம்புமறை யென்றருளவே)

உண்டு மில்லையு மிரண்டுமல வாகிமனவாக்
குன்ன லோதலரு மாயையுள வுண்மை யுணர்காற்
பண்டு மில்லையிது வந்தபடி சொல்லவுளதோ
பகரு தாகாண மோர்புடைய தேபகர்வதே (உ)

வெய்ய வன்கணுள தாயவன்ம றைந்திடவெழும்
மேக மேயென விளம்பவிர கின்றிமனனஞ்
செய்ய வின்றியுள வொண்சுடர்முன் மாயைசனனஞ்
செய்து மூடுமதன் மேனிதெரி யாதவகையே. (ங)

ஓசை யாதியுல கானபரி சொன்னவொருதன்
னிலையி னின்றுணர்வின் மாயையொட விஞ்ஞைபு
லீச ஞகியுயி ராகியுயி ரானவவனே [ணர்வா
டின்ப மாகியறி வின்மையெனு மாதிசையவே. (௪)

அறிவி லாமைபெறு மைந்தன்மன மந்தமனனுக்
கான பன்னிய ரபேட்சையு முபேட்சையுமெனப்
பிறிவின் மோகன்முதல் வந்தன ரபேட்சை மடவாள்
பெறவி வேகன்முதல் வந்தன ருபேட்சையறவே. ()

பந்தமா நெறியை மேவிய வபேக்ஷை யைமனம்
பற்றி முற்றும்வன் பெற்றவர்கள் கொள்கவெனவே
யந்த மோகவஞ் ரேசனர சானவதனு
னறிவி வேகன்முத லானசுர ராறுவர்களே. (௬)

அவுண ரென்பதடன் மோகன்முத லாமறவரே
யமர ரென்பது விவேகன்முத லாமறவரே
யிவ்வ ணிங்கிருவர் வம்சவர லாறுமெனவே
யென்னை மோகனர சாளவுல கெய்துதுயரே. (௭)

வேறு

ஆனகேத மெல்லைசொல்ல வறிஞரில்லை சிறிதியான்
மீனகேத ஞதியால் விளைந்தவா விளம்புகேன். (௮)

குடர்வழும்பு தொடர்நரம்பு குருதிகொன்பு குழுமவுங்
கடல்வழங்கு மயிர்தமிந்த மகளிரென்பர் கவிகளே (கூ)

வேரிவாரி யுண்டுவண்டு ஞிமிறுமிண்டு மடையவேழ்
வாரிவாரி யுண்டவம்பு வாகமென்பர் மயிரையே. (௰)

மயல்கொடம்பை யுமிழநின்ற குமிழியென்று மதிகொள்ளார்
கயல்களென்பர் பிணைகளென்பர் கணைகளென்பர் கண்ணை
யே. (க௰)

துரிசதுன்று கபம்வழங்கு துளைசெய்துண்ட மதனையே
பரிசில்கொண்டு கவிசனங்கள் குமிழதென்று பகர்வரே (௰உ)

மலமொழுங்குண் மலியநின்ற வதரம்விஞ்ச மதனனே
விலவதன்று தளிரதன்ற திந்திரகோப மென்பரே. (௰ங)

பல்லையென்று மென்பெனுது பவளமுட்பொதிந்தகூர்
முல்லையென்று முருவலென்று முத்தமென்பர் பித்தரே ( )

கலர்நிறஞ்செய் வதனம்விஞ்சு கபம்விளைந்த கவினெனர்
மலர்நிறைந்த மறுவொழிந்த மதியமென்பர் மயல்கொடே

மருவி சந்து தொறுமெலும்பென் மதியதின்றி வளைகொ
டோர, டருவுலந்த விளகுழய்ந்து தழுவிலென்று விழு
வரே. (௰௫)

பிணிசெய்கின்ற கழலையென்பில் பிசிதபிண்ட முசிதமா,
யணிசெய்கொங்கை யமிர்தகும்ப மெனவிரும்பியணைவரே

அபசதங்க ளுபயரந்திர மவை சொரிந்த வறியினு
ழிபசிரங்க டபிதம்ப மெனவியம்பி யிடுவரே. (௰அ)

அரியரந்த விழியிலன்ப ரதிபயஞ்சொ ளளவதோ
பரிபுரஞ்செய் பதயுகங்கொள் பணியுவந்து பணிவரே.()

வேறு

ஓராத வன்ப ருறுகா்த லென்னை யுரைசெய்தல் யாதுமு ணர்வோ, ராரா த வன்பு மடவார்கி றத்தி னலையாழி யே ழினளவே. (உ௰)

உளஞ்செய்து கொண்ட மடமா திருக்க
விலைமாதர் தாமு முளராக்
களஞ்செய்வர் காதல் பெரிதாகி யேதில்
குலமாதர் தங்கள் கவினே. (உக)

வேறு

வார்த்தை வேறுசெயல் வேறு வஞ்சமா
மனனும் வேறுபட மாதர் வைகலுந்
தூர்த்த சேவைசெய வன்பு செய்வரே
சுத்த மாமவர சுத்த மாகவே. (உஉ)

உருவ நங்கனை யார்வ னப்பிலா
ரும்பர் நீசரென லற்று ளன்கொள்வா
ரிரும னஞ்செய்மட வார்த னத்தையே
யிளையர் மூப்பரிவ ரென்று மில்லையே. (உங)

வேறு,

கிறியினிப் பரவையர்க ளுறுதுவக் காட்வர்கள்
கிளரவொட் டாதநரகென்
றறியவுற் றுருமுற வணைவதப் பாமுருவி
லருவருப் பானவிடனே. (உ௪)

இறுகவப் பாவையர்க டழுவவித் தாசைபக
விரவுழைத் தாவியிறவே
யுறுகவுற் றூமிவ ரொழியநிற் போமெனுணர்
வொருகணப் போதுமிலரே. (உரு)

வேறு.

சிறுவர் யாவரோடு மடவார்கள் காதல்
பொருள்காதல் சிந்தைசெயவே
கூறுவர் வாய்மையல்ல படிறே நினைப்பர்
கொலைசெய்வர் கோபமிகவே. (உசு)

பாகுதி வந்தொருண்டி பரிவோடு நல்கு
மவரோடு செய்வர்படிறே
யாகுதி பண்ணவன்பொ டணைகின்ற வன்கை
யடுகின்ற வங்கியெனவே. (உள)

புற்புதமென்னவிந்த்ர தனுவென்ன வந்தில்
வுடல்பொன்றல் கண்டுநிறைபொன்
வெற்பதன் விந்துவென்னும் வகைதேடி ஞறு
மமையாம லாசைமிகுமே. (உஅ)

நொந்தொரு குன்றி குன்றில் விலைசெய்வர் தம்மை
நுகர்வே நினைந்து நுர்கவர்
வந்தொரு குன்றையொன்றின் மதிசெய்வர் தம்மை
பொருவச்ர பாணியெனவே. (உகூ)

வேறு.

புலைசரிந்த குலனைநின்று புகழ்வதுஞ்செய் துவக்கரற்றகை
சரிந்து தொழுவதொன்று தருவதென்று தமதுளே. (ருஎ)

வேறு.

அருந்தலும் புணர்ப்புமன்ப ரானவான வரசையால்வருந்த
லென்று முள்ளதாப மாதவத்தி னில்லையே. (ருக)

வேறு.

பிறன்பொருள் கவர்ந்துகொளு மாறது
நினைந்தறிவு பேசும்வகையே
யறம்பொருளெ னுங்கலைகள் கற்பது
மதற்கிசைய நிற்பதுவுமே. (ருஉ)

அருந்தவ ரெழுந்துல கடங்கலு நடந்தணி
நடஞ்செயலினே
யிருந்தவ வுடம்புகொ டிடந்தொறு மிடந்தொறு
மிசைந்திடுவரே. (ருரு)

வேறு.

தெளிய மாதிமுத லெட்டி யோகமுஞ்
செய்து செய்வர் பெரிருடி வர்களரா
வெளிச மாம்சமது நித்தை மைந்துனம்
விடியு மெல்லையினி யோக மேகவே. (ருச)

சிந்தை மாதரைய லான்ம றந்துமொரு
தெய்வ சிந்தனைசெ யார்களே
தந்தை தாயர்முது குரவ ரேவல்செய
மைந்த ரானவர்க டவிர்வரே. (கரு)

கொண்ட கேள்வனை யொழிந்தொ ருத்தனொடு
கூடி வாழ்வர்குல மாதரே
பெண்டிர் காதலொடும் வாட வாடவர்கள்
பிறனில் வீழ்வர்பிழை பெருகவே. (கசா)

ஒழுக்கி லாதவ ரொழுக்க முள்ளவர்
தவங்க ளைப்பழு துரைப்பரே
வழுக்கி லாவறிஞ ரறிவி லார்களென
வறிவின் மானிடவ ரறைவரே. (கஎ)

அரசர் நீதிகெட வாழ்வர் தங்களை
யடைந்த வர்க்கருள்செ யார்களே
புரைசெய் தாரையர சரைய மைச்சரொடு
போர்க்க ளத்தி னிறை போவரே. (கஅ)

உறுப யன்சிறிது மின்றி யும்பிற
ரிடும்பை கண்டிட வுவப்பரே
பெறுப யன்கருதி யுறவு கொண்டவர்க
ளிரவு கண்டெனி பிரிவரே. (ககூ)

## வேறு.

குடும்பச் சிந்தை யொழியக் குரம்பைக்
கிடும்பை சிந்த நினைவென்ப தில்லையே (௪௰)

ஊக்கக் கேட்டி னுளத்த நலன்பிற
ராக்கக் கேட்டி னெரியு மவியுமே. (௪௧)

பட்ட வாகம் பதைப்பது பார்க்கவே
விட்ட வாவென்ன வேலை விடுவரே. (௪௨)

குமத மெங்கணு மானது கோதறு
சமத மங்க ளொளித்தன தப்பியே. (௪௩)

மோக முட்டி மொழியிய மாதியர்
யோக மெட்டு மொளித்தன வோடியே (௪௪)

வீட்டின் மேவும் விருப்பம் வெகுண்டுபோய்க்
காட்டின் மேவிக் கசந்து திரியுமே. (௪௫)

சாந்தி வெஞ்சினக் காயெரி போனது
சாந்தி சாந்தி யிழந்துயிர் தன்னுடே. (௪௬)

வேத நான்கும் விளங்கிய வாகம
பாத நான்கும் வழங்கில பாரிலே. (௪௭)

எங்கு முள்ள திறையரு ளின்றியப்
பங்க முன்னபொய்ப் பாடாண்ட நூல்களே. (௪௮

வர்க்கம் விட்டவெம் மார்க்கமும் வாதுசெய்
தர்க்க மிட்டுத் தடியடி யானதே. (௪௯)

வேறு.

ஆந்தரமிகவிளைந்தது வன்பருளறமகன்றன
மந்தரமலைமறைந்தன மந்திரவுபநிடங்களும். (ருய)
இந்திரவுலகெனும்படியெங்கணுமகனனின்புறு
சந்திரகலமடந்தையர் தங்குலமிகவிளைந்தது. (ருக)
மங்கையர்செயும்வரம்பறு மங்கலகலகமெங்கணுந்
சங்கையைவிடநிலம்பல சங்கரகுலம்விளைந்தது (ருஉ)
அந்தியுமரபிறந்தன ரந்தணர்குலகுளப்புகக்
குந்தியகுளிபிறன்பொருள் கொண்டிடுமபிமதங்கொடு
முந்தியமறைமொழிந்திலர் முன்றொழும்வகையொழிந்தி
டப்புந்தியினிடைபுகுந்தது பொங்கெரிதிரிவிதங்களும்.

வேறு.

உரைசெய்முறையன்றிமற் றுமுவருணவொன்றறுத்
தரசர்பொருள்கொண்டிடற் கமைவரவர்நின்றழ. (ருரு)
புகைவர வழிந்திடப் பொருண்முழுதுகொண்டுவெம்
பகைவர வழிந்திடப்படர்வாரு வெஞ்சுரம். (ருசு)
அரிகளுறில்வெஞ்சமத் தவரையடலின்றிநற்
பரிகரியழிந்துகைப் படைவிடுவரஞ்சலில் (ருஎ)
குலவணிகரன்புடைக் குரவர்பொருளன்றிலைச்
சிலவணிகிலங்கதிற் சிறிதுகொளல்சங்கையில். (ருஅ)

வேறு.

வந்த பொன்றுமொழிய வணிகர்த
[illegible] (ருகூ)

அவம்பு ரிந்து திரிவார்க ளந்தணர்
தவம்பு ரிந்து திரிவார் சதுர்த்தரே. (௬௭)

வேறு.

பாதமோதி யேவல்செய்த பனவரைப் பழித்துநால்
வேதமோதி சீசசாதி விப்ரசாதி யானவே. (௬௮)

மறையவுண்கை தவிரவின்ப வகுளகந்த மதுவெனு
நிறையவுண்டு விப்ரசாதி சீசசாதி யானதே. (௬௯)

மோகன்சரிதை முற்றிற்று.

---

வேறு.

சொல்லு வானரிது மோக சேனைசெய
லென்ன வேசுருதி சொல்லுவான்
வெல்லு வானவனை யிறைவ ரும்படி
தவஞ்செய் வான்விறல்வி வேகனே. (௭௦)

தவத்தி னாற்பெறு விவேகன் முன்பிறைவி
தான்மொ ழிந்தருளு தம்பிரான்
றிவத்தி னார்தொழு சிவப்பிர காசனிரு
செய்ய செம்பொனடி சேரவே. (௭௧)

வேறு.

தோாவி வேகங் கொடுபொரு மோகன்
சுராசுரே சருந் தேயத் தொலைப்பதுந்
தேர விவேகன் சிவப்பிர காசன்
பதத்தின்வின் ணப்பஞ் செய்யும ளவே. (௭௨)

வேறு.

அடிவ ழங்கி னறிஞர்க டம்பிரா
னமரின் மோகனுஞ் சேனையு மாருயிர்
மடியு மென்னு மளவோ வவற்றரு
மனமு மாயுமா மாயையு மாயுமே. (௬௬)

ஒன்று கூறு முபநிட மெம்பிரா
னுருவு கொண்ட துறுதுயர் தீர்க்கவே
யென்று கூற விரும்புகி தீர்ந்தபோ
வின்ப மெய்தி யிருந்த வளவிலே. (௬௭) ஆ௲ ௪௱௮௧.

---

வேறு—ஏகன் றிருப்பவனி.

ஆண்டானடி யருளெய்தவி வேகனுடன் மோகன்
மாண்டானுயி ரென்றங்கொரு விச்சாதரன் வந்தே (௧)
பாதந்தன தலையிற்கொடு பரவப்பழ மறைசேர்
மாதந்தமி னிறைசேவடி வந்தித்து மகிழ்ந்தே. (௨)

வேறு.

என்ற வப்பயனெ னெம்பி ரானருளின் மோக னுருயிரிழக் கவே, வென்ற வப்பரிசெ லாம்வி ளம்புகென வேதொடங் கினன்வி ளம்பவே. (௩)

வான நாட்டும னித்த ராகவழி தேட வீடுபெற மண்ணி லே, ஞான நாயகன்ம லர்ப்ப தந்தனை வழங்கு நாளிலொரு நாளிலே. (௪)

வேறு.

ஓடிவில்பர வின்பமுற வுரியபர விஞ்சைமகள்
கலவியை யுவந்தவுரவோ
னடியவர்கள் சங்கதி யதிரவணி சங்கமெழ
வறிதுயி லுணர்ந்தருளியே. (ரு)

கண்புனலு மார்வமும் வழுத்துமிசை மாலையு
மழுத்தமுறு காதலடியா
ரொண்புனலு நாண்மலரு மொக்கவிர விப்பரவு
மர்ச்சனையு வந்தருளியே. (சு)

வேறு.

சிவேக நாதசிவ போற்றி செம்பொனடி
போற்றி போற்றிசய சயவெனு
விவேக ஞதிகளு மடியர் தம்மொடு
முனிக்க ணங்களும் விரும்பியே. (எ)

புவியு ளார்மகிழ வீதி ருப்பவனி
போத நின்கழல்கள் போற்றவே
யவியுண் வானவர்கள் யாரும் வந்தனர்க
ளெந்தை காட்சியரு ளென்னவே. (அ)

வேறு.

மேதகு சர்ளும் பளிதமு மேயு
மிர்கம தமுஞ்சேர் விடுபனி நீரின்

சேதக முந்தற் சேர்ந்தவர் நெஞ்சிற்
சாந்தமு மெய்யிற் சேரவ ணிந்தே. (௯)

செங்கழு நீர்கொண் டன்பர்செ யும்பூ
மாலையொ டுள்ளஞ் சேரநு ராகத்
தங்கழு நீர்கொண் டன்பர்செ யும்பா
மாலையு மார்பத் தாரவ ணிந்தே. (௰)

ஆருற வாரிங் கயலென வுள்ளத்
தறிஞரு மாயா வதையவ ரோடும்
போருறு மோகன் கிளையொடு பொன்றிப்
போகமி திக்கப் பொற்கழ லிட்டே. (௧௧)

குடிமுழு தாளக் குவலய மேவுங்
குருபர னார்தங் கருணையொ டுஞ்சே
வடிமுத லாகத் திருவபி டேகத்
தளவும ணிப்பொற் பணியும ணிந்தே. (௧௨)

சேமிசை யானுந் தூய்மறை நாலுந்
திருநெடு மாலுஞ் செவ்வர விந்தப்
பூமிசை யானுங் காமுறு ஞானப்
போதக மேலே போதரு போதே. (௧௩)

வேறு.

கடுமதி வரப்புவனி கலமதி சயிக்கவொளிர்
கலன்மருவு முத்திவரவே

யுடுமதி யொளிக்கவடி யவர்மதி களிக்கவுய
ரொருகுடை நிழற்றிவரவே. (௧௪)

சாமர முழக்கவுயிர் சாமர பொழிக்கவல
தாமரையு கத்தினலன்றி
சாமரம னுக்கருகு தாமரை முகத்தியர்கள்
சாமரமி ரட்டிவரவே. (௧௫)

விடைகருட னன்னமுத லாகவெழு துங்கொடிகள்
பின்புவர விண்ணவரெலாந்
தொடரவரி தென்று * மறை மொழியறிவெ னும்
பெரிய துவசமுமு யர்த்துவரவே (௧௬) ஆ ௬௧௯

பரவுதல்.

இரவிமதி பிரமன்முதல் சுரரவனி சுரர்முனிவ
ரெழின்மறைகள் சயசயவெனப்
பரவிவரு மரவமொடு பரவையென வடியவர்கள்
பரவிவரு பரிசுபகர்வாம். (௧)

வேறு.

கர்தவினைத் துருகியழு மடியார் தங்கள்
கண்ணினின்றும் போராத கண்ணே போற்றி

* தொடர்வரிய தென்றுபல சுருதிமொழி வீடுதரு
துவசமுனுயர்த்து வரவே. எனவும்பாடம்

# மோகவதைப்பரணி.

போதலையும் வருதலையு மொழித்து ஞானப்
பூரணமாய் வேதிக்கும் புனிதா போற்றி (௨)

பொய்யர்க்குப் பொய்யான பூத பேதப்
பொருளாயு மிருளாயும் புரிந்தாய் போற்றி
மெய்யர்க்கு மெய்ஞ்ஞான வநந்தா னந்த
வொளியாகி வெளிப்பட்ட வேந்தே போற்றி. (௩)

ஆதியுமா யந்தமுமாய் நின்றாய் போற்றி
யாதியந்த மில்லாத வமலா போற்றி
சோதியுமா யிருளுமாய் நின்ற தூய
சொரூபானந் தச்சுடரே போற்றிபோற்றி. (௪)

அனைத்துலகு நின்பாலா நின்றாய்போற்றி
யழிவாக்க மறநிறைந்த வாதி போற்றி
நினைத்தவடி வாய்நிகழ்ந்து நின்றாய் போற்றி
நினைவிறந்தா ருள்ளத்து நிதியே போற்றி. (௫)

காரணத்தின் காரணமாய்க் கழன்றாய் போற்றி
கண்களிக்கும் படிவந்த கழல்கள் போற்றி
யாரணத்தின் மெய்ப்பொருளா மறிவே போற்றி
யடியவரங் கைக்கனியா மமிர்தே போற்றி. (௬)

கல்லாமை கற்பித்த தாளா போற்றி
கண்ணிற்குங் கண்ணான கண்ணே போற்றி

சொல்லாமற் சொல்லிறந்த பரமானந்தச்
சுடர்திகழச் சொல்லவல்ல சோதி போற்றி. (எ)

ஆவியா யனைத்துயிர்க்கு நின்றாய் போற்றி
யறிவறியா மையைக்கடந்த வறிவே போற்றி
பாவியாப் பாவகத்தி னிருந்தாய் போற்றி
பற்றற்றார் பற்றநின்ற பற்றே போற்றி. (அ)

போகமும்வீ டும்புரக்கும் புனிதா போற்றி
போதுக்குப் போதுநலம் புதியாய் போற்றி
யேகமுமா யநேகமுமா யிருந்தாய் போற்றி
யெல்லாமா யல்லாத விறைவா போற்றி. (௯)

பரவுமவ ருளத்திருந்த பதியே போற்றி
பந்தமும்வீ டும்படைத்த பரனே போற்றி
யிரவுபக லறவருளு மெந்தாய் போற்றி
யிப்பரிசென் றியம்பரிய விறைவா போற்றி. (௰)

முத்திக்கு வித்தான முதல்வா போற்றி
மொழியிறந்த வானந்த மூர்த்தி போற்றி
சித்திக்கு ஞானகனத் தேனே போற்றி
சிவப்பிரகா சக்கனியே போற்றி போற்றி. (௰௧)

வேறு,

அன்னையை யினிக்காணுமே யடைந்தவர்க் கயிர்தாய் நின்ற
தன்னையே யளிக்க வல்ல தம்பிரான் போற்றி போற்றி. (௰௨

துய்யசே வடியான் மாயைத் துகளறத் துகைக்க வல்ல
செய்யசே வகனே போற்றி சிவப்பிர காசா போற்றி. (கரு
இப்படி மறைக ளாலும் யாவரும் போற்ற வீச
னப்படி யிலாத பொற்று ளணங்களுர் வணங்கி வாழ்த்தி

வேறு,

அன்றால முண்டா னிவன்காணு மென்பா
ரருளல்ல வோவுள்ள தெல்லா மவன்பாற்
சென்று விரங்கா திரானென்று செல்வார்
தெரியாது பெரியோர்க டிருவுள்ள மென்பார். (கரு)

அளியொன்று தோண்மாலை தரவேண்டு மானை
யஞ்சாது பின்செல்ல யாமார்கொ லென்பா
ரெளியன் கிடீர்நல்ல மெய்யன்ப ரோடே
யேத்திப் பணிந்தா லிவன்சால வென்பார், (கசு)

அங்கண்ண னென்பார் திருக்கண்க ளன்றோ
வடிபேணு நம்மாவி யடுகின்ற தென்பா
ரெங்கண்ணின் முன்னேயில் விறைவன்க ணின்று
லெங்கேயொளிப்பே மிவர்க்கென் றுரைப்பார். (கஎ)

தனுக்கல்லை முன்செய்த தனிவீர னென்பார்
தன்காலின் வீழத் தடங்கண்க ளாலே
மனக்கல்லை யெல்லாம் வளைத்தாள நேரே
வல்லான்முன் னெக்கல்லும் வளையாத தென்பார் (கஅ)

நாமாது முற்செய்த தவமென்கொ லென்பார்
நாமாதி தன்றன்னை நாவார வாழ்த்திப்
பாமாலை சாத்தும் பதம்பெற்று நின்றாள்
பாரீசி தார்பெற்ற பதமென்று பகர்வார். (௧௯)

பொன்மேனி கண்டார்கட் ன்மேனி யாகப்
புரக்கும்பி ரானென்றல் பொய்யன்று மெய்யே
யென்மேனி பொன்மேனி யாய்விட்ட தென்பா
ரிப்பேறு பெறுவார்க ளியாரென்றி சைப்பார். (௨௦)

வேறு.

முடியாதப தத்தை யளிக்கு
மொழியாமொழி யாளிப தத்தே
கடியார்மலர் தூய்த்தொழு கிற்பார்
கையென்னத வஞ்செய்த தென்பார். (௨௧)

மரணப்பிற வித்துயர் தீர
மருந்தென்று வணங்கி வணங்கிச்
சரணப்பது மந்தலை வைப்பார்
தலையென்னத வஞ்செய்த தென்பார். (௨௨)

பூரணப்பரி பூரணபேர்தப்
பொன்மேனி புலப்பட நல்குங்
கருணைக்கழல் கண்களில் வைப்பார்
கண்ணென்ன தவஞ்செய்த தென்பார். (௨௩)

பேயாகிய வெம்மையு மாளும்
பித்தாவென வொத்தன பேசி
வாயாரவும் வாழ்த்திப் பிசைப்பார்
வாக்கென்ன தவஞ்செய்த தென்பார். (உச)

காயாலய மேவியி ருந்துங்
காணுமன் மறைந்துறை யுங்கண்
மாயாவெளி வந்தனை யென்பார்
மன்னுவெளி வந்தனை யென்பார். (உரு)

நீராயுரு வார்துதி செய்யா
நிற்பாருனை யிப்படி காணில்
வாராத பதம்பெற வேண்டேம்
வரமீதென வாழ்த்தியி ரப்பார். (உசு)

வேறு.

தேனனைய சொல்லியரு மாதவரு மிங்ஙனிரு
சேவடிந யந்துசெலவே
வானனைய வன்குமரை மாநகர்வ லஞ்செய்திறை
மாளிகை புகுந்தருளியே. (உஎ)

வடிவுகொடு வந்தவருள் கருதுதொறு மன்பரிரு
மலர்விழி வழங்குபுனலே
படிவதுவு மன்றிமிகு பரிமளக கந்தமுறு
புனலிடை படிந்தருளியே. (உஅ

இனியவடி யார்துதியெ னமுதுசெவி யுண்ணவிழி
யிவர்களுயி ருண்ணு மிறையோன்
கனிபவள வாயுலக வமுதொழிய வின்சுவைகள்
கமழடிசி லுண்டருளியே. (உசு)

மருடரு பவஞ்சிதைய வந்தனைசெய் பூசுரரு
மாதவரும் வேதநெறியுமா
புருடனும் விவேகனொடு பொன்மலர்கள் சிந்தியடி
போற்றிட விருந்தபொழுதே. (ஙஎ) ஆகூ ருஉள.

---

(ஒற்று.)
நியதியுரைத்தல்.

தீர்த்தனெனை யாளிதிரு முன்பிறை பதங்கடுதி
செய்துபணி செய்பவரையு
மேற்றநினை யாரையு மியம்பென விவேகனதி
காரியை யியம்புமவனே. (க)

வேறு.

சுருதி யாயிரமு கங்கள் கொண்டிறைவ
தூய நின்கழல்கள் பாடுமே
மிருதி யாகமபு ராண ஸேதையிதி
காச மப்பரிசின் மேவுமே. (உ

அமைய மாறறியு முனிவர் பேணுவது
நின்னை யேயயலி லாமையால்

சமய மாறுமொரு நின்னை யேயிறைவ
தாழு வந்தபடி தாழ்வதே. (ங)

நாளு நாளுநினை யஞ்சி வானமிசை ஞாயி ருதிவரு கின்ற
வெக், கோளு நாளுமுன நீவி தித்தவழி யோட டப்பர்குலை
யாமலே. (ச)

உழலு மாருதமு மின்றவ நின்றுவலி
செய்வ துன்வலியை யுட்கொடே
யழலும் யாவுமடு வதும டைத்தபணி
யென்று நின்னடி களஞ்சியே. (ரு)

வருண னின்றுபணி செய்ய நின்னைமிக
வஞ்சி நெஞ்சினிடை வள்ளனின்
சரண பங்கயமி லாரை யேகொடுமை
செய்வ துந்தரும ராசனே. (சா)

ஏத்தி யெண்டிசையி லமரர் யாவருநின்
னேவல் செய்யுமவ ரின்பமா
மூர்த்தி நின்பணிய லாது வேறிலது
மூவ ருஞ்செய்துமு டிப்பதே. (எ)

விண்ணு ளாருமவர் கோவு மற்றுமுள
வேறு வேறுலகினி யாவரு

மண்ணு ளாருநினை யன்றி யாவரை
வணங்கு வார்கருணை வள்ளலே. (௮)

வேறு.

ஏகநின்கழ லேவல்செ யாதவ ரில்லையே
மோக னின்கழ லேவல்செ யானென மூர்த்தியே.

ஆ. ௫௩௬.

---

தூது.

மோகனெ னுமைந்தனைந மேவல்செய வென்றுநல
மொழியவல நியாயமகனைப்
போகவென வங்கவனை யெய்தியவ னோதுமருள்
செய்தவைபொ ருந்தும்வகையே. (௧)

உன்னில்வலி மிக்கவர்கண் மோகவர சேயொரு
சுராசுரரு மில்லையுலகத்
தென்னினு நினக்குறுதி யார்வதுவி ருப்பினொடி
யான்மொழிவ தற்கிசைவதே. (௨)

வேறு.

அழியாத நீதி யறியாத மோக
னவன்வந்து சேர்வ னென்வே
வழியாறி னொன்றின் மதியான நீதி
மகன்முன்னி யேவன் மொழிவான். (௩)

வேறு.

மங்கையொரு பாகனொடு மாலயனை தாலயமு
மாதவர்கண் மன்னுவனமும்
கங்கைநதி பொன்னிநதி கன்னிநதி யின்னுமுள
நன்னதிக ளின்கரைகளும் (ச)

இயமநிய மாதியெனு மெண்வகை யியோகமு
* முயற்சியொ டியற்றியிடர்தீர்
சயமுனிவ ரானவர்கள் சாந்திமுத லாரொடு
தனித்தனியி ருக்குமிடமும். (ரு)

பாதமிறை யோனருளி லேயகில வுயிருருவு
பழையவறி வாவதெனுநால்
வேதமிறை யாகம புராணமிதி காசமுடன்
மிருதிகள்வி ளங்குமிடனும். (சு)

ஆரதர மானகலை சாரதர மானவை
தொகுத்துமுனி சொல்லியமகா
பாரதமும் வேறுமுள வேதநெறி மாதவர்
பகர்ந்தனவ ழங்குபதியும். (எ)

சாதனச துட்டய நலந்தனை யலம்பெற
வடைந்தவர்க டன்னையறியும்

* அருத்தியொடு எனவும் பாடம்.

வேதன விருப்பினர் பொருந்துமிடம் யாவையும்
விவேகனார சாளுமிடமே. (அ)

என்னுடைய நாதனருள் செய்தவிவை விட்டிதர
பூமிபுகின் மோகவரசே!
யுன்னுடைய வாவியுன தாகுமுறை செய்தி
னுணர்ந்துகொ ளுனக்குறுதியே. (கூ)

காதிவரு மாறுசம யக்கடவு ளாகுமிறை
கண்ணுதல்மு குந்தனயனென்
றோதிவரு தேவர்களு மாகவிவை யாதவர்க
ளும்பனவ னென்பதுணரே. (௰)

உதித்தகுல னென்றிறைவ னுக்கிருதி றத்தவரு
மொக்குமென வோர்பொழுதுநீ
மதித்தலொழி யோர்குல மறம்பெருகு மைவரு
மறம்பெருகு நூற்றுவருமே. (கக)

வேறு.

குவளை யாம்பலர விந்த முற்பல குலங்களேதருச லங்களே
தவளை யாமைசட முதலை நீரரவு தன்னை யுந்தருவ தன்னீ
லே. (கஉ)
தெருளு றும்படி விசும்பின் மீதுலவு திங்க ளுயிருங்கோ
ள்களே, யிருளு றும்படிய தன்க ணேயுலவி ராகு கேது
வுங் கோள்களே. (கங)

கறுத்த தாயினு நிகர்க்க நின்றிலது
கோகிலத்திறெனு காகம்வெண்
ணிறத்த தேனுமட வன்ன முங்குருகு
நீரில் வாழினுநி கர்க்குமே. (கச)

மலைய முங்கயிலை யிமைய மந்தரமு மலைக ளேபிறவு மலைக
ளே, மலையின் மங்கைகலை திருவ ருந்ததியு மகளி ரேபி
றரு மகளிரே. (கரு)

வேறு.

கங்கை காவிரியு நதிகளே கானி யாறுகளு நதிகளே
மங்கை பாகனுங் குரவனே மற்று ளார்களுங் குரவரே.

நந்த கோபன்மகன் மனுடனே நாட்டி னுள்ளவரும னுட
ரே, யிந்து சேகரனு மீசனே யேனை வானவரு மீசரே.

வேறு.

சொல்லே மறையும் பிறவுஞ் சொலலே
சுடர்மா மணியுஞ் சுரனார் மலையுங்
கல்லே யிறைபே னும்விவே கனையுங்
கருதா நினையுங் கருதிப் படியே. (கஅ)

கீழ்மே லுளதோ விறைவர்க் கெனினீ
யவருக் கிலகே டறுசெய் யமலர்த்
தாண்மேல் விழுமா தவர்மே லவர்கீ
ழவரர் குவர்தா ளில்விழா தவரே. (கக)

நீயும் பெருமா னடியே னுதியே
னெடுவா னுலகங் களுநின் னரசே
யாயும் பருநின் னைவணங் குவர்நீ
யறிகின் றிலையெந் தைதனு ரருளே. (௨௦)

வேறு.

என்று நின்றவ னியம்பவழ லென்னவிழியா
வேக னேவல்செய்வி வேகனர சாளவரவே
நன்று நன்றினிவி வேகனல நம்பகைவனன்
னுத னென்றிவன்மொ ழிந்தவன மக்கெதிரியே.

மோகன் யானெனது தந்தைமன னிந்தவுலக
மூன்று மென்றனர சாக்கினன்மொ ழிந்தவிறை
னேக னுமவனி னென்னிலிக லிற்குவலியார் [யோ
யாவ ரென்றினி யியம்புகவெ னக்கிசையவே. (௨௨

வேறு.

ஓதியொ ருத்தனல்க வதனத்தை நல்க
வரைமார்பொ ருத்த னுடலிற்
பாதியொ ருத்தனல்க மகளிர்க் கொறுத்த
படைமாரன் யாவர்படையே. (௨௩)

அரியய னென்றுகூறு மறிவோ ரரக்க
ரசுரேச ரூர்க ளமர்செய்
தெரியெழு வித்தகோப னெனதேவ லன்றி
யெவரேவல் செய்வதிசையே. (௨௪)

சிறியனு மாயிரக்க நெடுமால் சிறந்த
பரமீச னனசிவனே
வறியனு மாயிரக்க வடலோப னின்று
வஸிசெய்வ தார்சொல்வழியே. (உரு)

வேறு.

அதமன் னசமன் னதன்மன் னசுபன்
னதபன் னபரன் னகிர்பன் னயமன்
மதனுன் மதன்வஞ் சகன்விஞ் சிபதுன்
மதிசம் ப்ரமன்மந் தநென்வம் சகனே. (உசு)

ஆகா தனசெய் பவன க்ரமனு
பாசன் னபிமா னியபா யனகன்
சோதா கரனு குவிதுக் கசுகத்
தொந்தந் தருவிப் ரமனூர் துணையே. (உஎ)

குரூரன் குருநிந் தகனந் தன்மகா
குபிதன் கிர்புனன் குவிர்தன் னவிர்தன்
சோரன் பரிவா திசுகிர்ப் பிசிதன்
சுரவிர்த் தனதி ப்ரமனூர் துணையே. (உஅ)

தேகன் பரதுக் கசுகன் கபடன்
செடிலன் குடிலன் டம்பன் விட்யோச்
சாகன் னதிசா கசிகன் னசகன்
சபலன் விபலன் னிவரார் தமரே. (உகூ)

ஞேகாரன் வெகுமா னிகுடும் பதரன்
குணாநிக் ரகன்விக் ரகமே வியசிங்
காசன் னவசன் விவசன் கலகன்
கலன்மத் யமனார் படைகட் டுரையே. (௩௰)

வேறு.

அஞ்ஞான சங்கமனு மார்யசன நிந்தகனு
மந்தரனு மந்தணர்மகா
யெஞ்ஞபரி யாசகனு மான்மபரி மோசகனு
மெங்கள்படை யென்றுகருதே. (௩௧)

விந்தியத ராசதனு முன்மத்த தாமதனு
நிட்டுரனு மித்ரசடனு
மந்தியப்ர தூஷகனு மதன்மப்பிர சஞ்சகனு
மப்ரதனு மியாவர்படையே. (௩௨)

அநர்த்தவிட யத்திலநு யோதனெனு நீசனு
மநர்ச்சகனு மிந்திரியகனு
மநித்தியசுக சங்கதனு நித்தியசுக வர்ச்சனனு
மாகுமிவர் யாவர்படையே. (௩௩

பயப்ரதன் மகாசனபராயணன் மலஸ்பர
தனக்கிரகண பண்டிதனோடே
யயக்யனு மெசப்பரி நிவர்த்தகனு மஞ்சனு
மசச்சனனு மியாவர்படையே. (௩௪

மனோதனு மத்ருவனு மாதுர்பிதிர் வஞ்சகனு
மச்சரனு மாதருடனே
விநோதனு மசற்பரனும் விவாதனும் விகற்பனும்
விதர்மகனு மார்விதயரே. (௩௫)

வேறு.

அதிப்ர தாபனு மதிப்ர மாதனு
மநர்த்த யேதுவு மபத்தனு
மெதிப்ர கோபனும் வெகுப்ர லாபனு
மிருக்க யாரெனை யெதிர்ப்பரே. (௩௬)

அநேக சாகசன் னித்திய வர்ச்சன
னீதி வர்ச்சன னித்திய சேவகன்
றேக போஷணன் போக பூடணன்
வேத தூடகன் யாவர் மேசனையே. (௩௭)

வேறு.

சுற்பி பாசா பரவசன் றுர்ச்சனன்
சுத்ர கன்மன் குதர்க்கன் கிருதக்ன
னற்ப சார னனந்ததுக் காகர
னநிர்த நிந்தக னூர்துணை யாவரே. (௩௮)

அப்ர சன்ன னசுசிய சாந்தக
னசற்ப்ர லாப னநித்ய நியமிதன்
விப்ர தூடகன் வேதப ராமுகன்
விடய சம்முகன் யார்படை வீரரே (௩௯)

பிராண யிம்சா பரன்பர தார
பரன ரூயா பரன்கர ரூசனாக்
கிராண ருசா பரன்பர தந்திர
ருட்சே பன்றுத்தி கன்றர் கிளைஞரே

தூட னன்னதி கண்டக னிட்டுரன்
றுர்க்க மன்றுக்க சிந்தகன் றாடனு
பாட னன்பர போகவி வர்ச்சகன்
பஞ்ச பாதகன் யார்படை வீரரே. (சக)

நிலையி லாமதி மானவி வேகியா
நிதம்ப விஷ்ப்ரியன் விக்ரக னிச்ரக
னலைய றுதசம் ப்ரமறு ரம்பக
னவய வத்தித ஞர்படை யாவரே. (சஉ)

வேறு.

உய்ந்து போக வுபாயமுண் டேநமக்
கைந்து பூதமு மென்படை யல்லவோ (சஙு)

வேறு.

தேவர் வென்றிலர் புலன்க ளோந்தினையு
முனிவர் வென்றிலர் சிறந்துளோர்
மூவர் வென்றிலர் சகத்தில் வென்றவர்கள்
யாவ ரென்றினி மொழிந்திடே. (சச)

வேறு.

என்ப டைப்பெருமை தானுமிறை யோனுமுனி
யாரு மிங்கறிவ ரெண்ணமில் விவேகவரசன்[வோ

றன்ப டைப்பெருமை யானறிகு வேனதறியான்
ருன்வ ரச்சொலிறை யைக்கொடுபொ ரச்சமரமே
அாது முற்றிற்று. ஆ௳ ரு௮௧.

மோகன்படையெழுச்சி.

அறிவி லாமதிவி வேகனொட வன்றலைவனுக்
கறிய வோதென விடுத்தவனே மோகவரசன்
குறியி லாமை இளர்காமனுட னெண்ணவருவெங்
கோபலோபர்படை கொண்டெழுக வென்ற பொழுதே.

வேறு.

சமைவிடு மெமைவிடு மெனவு ரைத்துவே
லெனவிரு கணையென விழிசெ லுத்தியே
சமைவர்க ளரிவைய ரொருக ணத்திலே
சதுமறை முனிவர்க * டவம ழிக்கவே. (௨)

ஒடிபட முனிவர்தம் விரத முற்றுரு
தலைவுவ ரொருகையொ டொருகை தட்டியே
விலடிபடு திருகை நிலவெ றிக்கநீள்
விழிசுட ரிருகுழை வெயிலெ றிக்கவே. (௩)

அடியிடை யினுமிகு மிருத வத்தினோர்
அணிபுற விணைமுலை மலைகொ லைக்கவே

* தவமிழக்கவே எனவும்பாடம்.

யடியிணை பணியுமி தழருமக்கெனு
வணிபரி புரவரி யொலிய மைக்குமே, (ச)

சடைசில புனையினென் மயிர்ப றித்திது
தவமென வுடைதவி ரினென்ம ழிக்கினென்
னுடைசில புனையினெ னுடைநெகிழ்த்துமுன்
னுலவிய மகளிர்நும் முளன ழிப்பரே. (ரு)

புலவிய லொருவிய புனிதர் புத்திகூர்
புலவியி லழிவகை புரிதவுற்றுநீள்
கலவியின் விழவடு கரிம ருப்புநேர்
கனதன வரிவையர் கலக மிக்கதே. (கூ)

குருகெழு தடமல ருகுமணற்குவால்
குயிலக வியபொழி லிசையிளைத்தகா
லுருகெழு மலரணை நிலவு முற்றுமோ
ரொருபடை முனிவரை யுணர்வ ழிக்குமே. (எ)

வேறு.

கோங்கரும்பு முலைமடவார் சூழ்போக வேண்மகரக்
கொடிமுன்போகத்
தீங்கரும்புச் சிலைமலரும் படையெடுத்துத் தென்றற்றேர்ச்
சென்றபின்னே. (அ)

இடிபோலு மிகற்றேர்மே லெழிற்படைகொண் டெரியெங்
குங் கொளுத்தித்தூமக்

# மோகவதைப்பரணி.

கொடிபோகக் கொடுமைகொலை பழிபாவஞ் சூழவெழக்
கொடியகோபன். (௯)

வேறு

ஒழிவறு புணர்வை யுளத்துளே
யுடையவர் தமையு மிமைப்பிலே
யொருவரொ டொருவர் சலிக்கவே
யுடலடு மமரை விளைக்கவே
வழிவரும் விரத மழிக்கவே
வருமற நெறியை யழிக்கவே
வணைபவர் தமையு மொறுக்கவே
வதிபய மிகவும் விளைக்கவே (௰)

அகலிட முடிய விடிக்கவே வசலமு மலைய வலைக்கவே வலைகடல் சுவற வெரிக்கவே வமரர்க ளுலக மழிக்கவே விகலெனு மெரியி லழற்றியா ரிருபரு திகளு மொளிக்கவோ, வெரியினு மழல விழிக்கவோ வெனவிடி னிளைஞ ரிசைக்கவே. (௧௧)

வேறு,

ஆசையின்ப மேவிமீள்வி லாதகாத லாகுதே
ரோசைகுன்ற லோபனேகு மாண்மையாவ ரோதுவார்
புகைப்புகா விடங்களும் புகுந்துநன்னை யாவருந்
திகைக்குமாறு நிற்கவல்ல தீரனிந்த வீரனே. (௧௩)

செய்தவங்கொ டைக்குலஞ் சிறந்தகல்வி செப்பல்போய்க்
கைதவங்க ரப்பிரப்பி வன்படைக்க லங்களே. (௧௪)

வேறு

மதமாச் சரியா திமகா ரதரோ
மொருவற் குளதாம் வலிசேர் படையின்
விதமார்க் கியலுஞ் சொலமே லெழின்மேல்
விண்டொன் றிலைநிற் பதுமே தினியே. (கரு) ஆ ருகூசு.

வேறு.

மோகனெழுச்சி வஞ்சி.

எள்ளின் றுணையும் புரையற் றுலக
மெங்கும் மிருண்மூ டவெழும் படையின்
வெள்ளம் பகரும் படியோ வினியவ்
விறன்மோ கனெழுச் சிவிளம் புதுமே. (க)

ஒண்முத் தன்மலர்க் கழலிற் பணியா
வொருமுத் தனுவந் தமடந் தையர்தங்
கண்முத் தணியத் தடமார் பணியுங்
கதிர்முத் தவடங் கள்கவின் பெறவே. (உ)

கால்விற் கழியா முனநாள் பரமன்
காலிற் கழியா தழிந்துயிர் போங்
காலிற் கழுகுண் டுவிடப் படுதன்
காலிற் கவினக் கழல்கட் டினனே. (ங)

மன்னுந் தவமும் புகழும் மரபு
மாறு வருளும் மணியா தழியும்

பொன்னூர் துகிரும் மணியும் பணியும்
பூணொன் றுநினைந் துபுனைந் தனனே. (௪)

வேறு.

அத்தற்ப தப்பொருளி னற்பொற் பதத்தையறி
வற்றுப் பொரக்கடவனு
மத்தப்பிர மத்தனினி மற்றுப்பொ ருப்பிலதென்
மத்தக்க ளிற்றின்வரவே. (௫)

வேறு.

வருபிறவி மாறவல குரவனடி பேணுமிது
வொழியமதி மாறுபடுவோ
னிருபுறமு மாரவரு கழுகிறகு போலவரு
மிருகவரி வீசிவரவே.

வேறு.

மதித்தொரு தனக்குள நலத்தினையு மற்றவர் வழுக்கினையு
மே, கதித்திரு புறத்தினுமெ டுத்துள தனிக்குடை கவித்
துவரவே. (௭)

அழுக்கினொ ரின்புறு மணப்பறை கணத்தது பிணப்பறை
யுமா, முழுக்கினை யறிந்துமறி யாவரசன் முற்பணை முழக்கி
வரவே.

கூற்றன மதக்கரி கொடிப்புய லணிந்துவரு குன்றனைய
தேர், காற்றன கடும்பரி நெருப்பென வமைக்கடல் கடுப்ப
வரவே, (௯)

வேறு.

எச்சில்காண லாவடிசி விட்டவாழி தான்மன்றய
விட்டநீறு மார்நிறைய விட்டபூணு நாலினுடன்
மிச்சிருனு ணவிரத விப்ரதீப ஞானமென்ன
வித்தைசால வேருலவு விப்ரர்கோடி சூழ்வரவே. (௰)

இட்டவேசி மார்கள்பெறும் வித்தையாசை யாலகல
வெக்யசாலை கோவியதில் யக்ஷமாண ராய்வடிவு
சிட்டவேட மாகமுடி தர்ப்பமாலை யோடுவெகு
செற்பவாய ராகிவரு விப்ரர்கோடி தேவர்வர (௧௧)

அப்ரகாச மாகவிடு மக்குமாலை யாபரண
வச்சிமார்கள் பானமதி லப்ரபோக ராயதிக
சுப்ரகாச நாமமொடு சுத்தமான ஞானபரி
சிட்டர்போல வேவருவர் கட்டசோர வாமிகளே. (௧௨)

உட்கியாரு மோடும்வகை நுட்கசூல வேலரிணை
முற்றகோடு தாமிருகை பற்றியோடு வார்மனிதர்
கட்கிறை கோலமொடு கட்குவாறு ணவதெதிர்
கக்குவாய ராகிவரு கட்டவேட தாரிகளே. (௧௩)

சித்தியாகு மாகநல செக்கராடை மூடியுடல்
சிட்டாகி மேவினவர் சித்ரநாரி மார்களாடு
புத்தியாகி யேபுலவு புத்திநாடி வீடுதொறும்
புக்கபூசை போல்வருவர் புத்தகூட வேடர்களே. (௧௪)

இட்டநீறு காணிலெதிர் முட்டெனுவ டாவகைசெய்
யட்சசாத னுமுகம திட்டுவாதி யாமுஇய
கட்டமான நாரியர்கள் பக்கலாசை கூரவதி
கட்டமாக நாறுமரு கத்துராலர் சூழ்வரவே. (கரு)

ஆ கூாடுக.

விவேகன்படையெழுச்சி—காஞ்சி.

இப்பரிசு மோகவரச ன்படை யெழக்கடிது
சென்றிறைவர்தஞ்
செப்பரிய சேவடி பணிந்திறைவர் தூதனுரை
செய்தபொழுதே. (க)

வேறு.

சிறிது சிவந்தில திருநய னங்களோர்
சிறுநகை கொண்டிறையோ
னறிது மவன்படை யெனவுல குண்டருள்
பவள மலர்ந்ததுவே. (உ)

அதிரத முங்கட கரிபரி யும்பரி
வரமும ணிந்தெழுமே
யெதிரெதிர் முந்தியொ ரேதில வன்படை
யெழுகவி ரைந்தெனவே. (ங)

இறைவன் விடும்படை யுடன்மன மைந்தனு
மிவனெடு மும்படையு

முறையிட நின்றில வளவறி கின்றில
வுய்பிட தங்களுமே. (௪)

வேறு.

பாகென்மொழியவ ராகமுறவரி பாசமிறவற வீசியே
காகமவருட லேறவிறுவகை நாதன்மதகரி காணுமே. (௫)
உலகிலொருவரு முணரும்வகையற வுபர்வதுறவுயர் வுடை
யவர், யிலகுமொருபது திசையுமிகலற விடுமவ்விறையவ
ளிரதமே. (௬)

வேகமிகுபகை வீரரிகலற மீளவடியினில் வீழவே
மாகமுடியினும் வீரர்நினைவினில் வாளிவிடுமிறை வாசியே
காவுப்பலபரி வீரர்பொரவெதிர் சாரிலவர்தலை சாயவே,மேவி
யிமையுறு போதினுடலுயிர் வேறுசெயவல வீரரே. (௭)

இருமை யையுமிற வெறியு மிறையடி
யவர்கள் குணவனு லேசினுற்
பெருமை திறல்பொறை வலிமை யளிவெளி
யொளிமண் வளிபுனல் பெறுவரே. (௮)

வேறு.

வினையை நீறெழுவி ழிப்பரேபிறிதில் வினைபெ லாமிற மிதி
ப்பரே, நினையு மாறறவெ திர்ந்த வாருயிரு நீரெனப்பரு
கி நிற்பரே. (௯)

வைகலு மெல்லியும்வ ரம்பிலாவுலக னைத்தை யுந்திசைகள் யத்தையு, மகில பூதசையும் வாரியேயயில வல்லசோரொரு வர் தாமுமே. (கக)

அண்ட காரணமு மாவிகாரணமு மாதி காரணமு மகிலமுங் கண்ட காரண ரங்கவேரொடு மறுப்ப ரேயொருக ணத் தினே. (கஉ)

ஒரோ ருத்தருணர் விற்குரைக்களவி டப்படாதவுரு வுடை யரே, யாரொ ருத்தரிவ ரொப்பர்தம்முடைய நாயனொரொரு வ ரன்றியே. (கங)

வேறு.

கூற்றையோ விலக்குவது கொடியவர்வெங் கூற்றினையே
காற்றையோ நிறுத்துவதுங் கடியமனக் காற்றினையே. ( )

சிலைகளையோ வளைப்பதுதான் வன்னெஞ்சர் சிரங்களையே
அலைகடலோ தூர்ப்பதவ ராவிப்பவக் கடல்களையே (கரு)
அல்லையோ பகல்செய்வ தறிவிலா ருளத்தினையே
கல்லையோ கனிசெய்வ தவர்கண்மனக் கல்லினையே (கசு)

கொல்விடமோ நுகருவது கொம்பனையார் தம்போக
வல்விடமே நுகர்ந்தாலு மயங்காம லிருப்பர்களே. (கஎ)
படநாக மோபூண்பார் பார்வைமுத லைம்பொறியாம்
விடநாக மைந்தினையும் பூண்டுவிளை யாடுவரே. (கஅ)

கொழுங்கனலோ வலிக்குமது கோபமெனுங் கொடுங்கன
லே, வழங்குவது மழிபொருளோ மறைதேடும் வான்பொ
ருளே. (கக)

அடலின்வரு மவமொழியத் தாழ்விப்ப தடியரையோ
முடலையுட லோவறுப்ப ததன்மூல வுயிரினையே. (உ0)

உரியநல வடியவர்க ட்பெருமை நம்முணர்விற்
றெரியுமென யாஞ்சொலிய சிறுமையே சிறுமையதே. (உக

வேறு.

அல்ல தங்கவர் பெருமையை யருமறை மொழிய
வல்ல தன்பரன் முகுந்தனும் பிரமனு மாட்டார். (உஉ,

இடையி லாரறிந் துரைப்பவர் தாமினி யிவரை
யுடைய நாயகன் பெருமையை யோதுவா ருளரே. (உங

வேறு.

கம்ப னல்லடி யார்புடை சூழ்வர நாப்பணே
செம்பொன் மாயணி வைதிகத் தேர்மிசைச் செல்லவே
யன்ன ரந்தைகெ டும்படி செய்தரு ளெம்பிரான்
முன்ன ரந்தர துந்துமி பெங்குமு ழங்கவே. (உ௪)

கலைக டந்தம திநிக ரல்ல கவிகையவ்
வலைக டந்த மதிநிறை வேநிக ராவதே. (உரு

இவண மென்றெழு தற்கரி தரமெழி லன்னமே
அவண முங்கொழு ஞானநெ டுங்கொடி யோங்கவே. (உஎ)

காம னும்படை யுங்கெடக் காணுநி ரூபக
நாம னும்படை யுஞ்செறு மெங்கணு நாடியே. (உஅ)
பொறையு மின்சொன் முதல்வரு தானையும் போகுமே
யறையும் வெஞ்சின மும்படை யுங்கட் டழியவே (உகூ)

வேறு.

தோஷா காரு கியலோர பனுடன்
றுயரப் படையுந் தொலையும் படிசந்
தோஷர் திகள்செல் லமதா திகளுந்
தொலையப் படைசெல் வகைசொல் லுதுமே. (௩௦)

அமதன் சுகன்மௌ னியசிந் தகனப்
பிரதிகூ லனதிட் டபரன் னியமன்
யமனின் மமனின் மலனித் தியபரன்
யஞ்ஞன் யதிபூ தகிதா கரனே. (௩க)

பிட்சா சனன்வை திகதன் மன்மகா
பெலனிந் தியநிக் ரகனுக் ரதபன்
னட்சா சனவே கனகெர் வியநா
யாசன் கிர்தகிர்த் யனநிந் தகனே. (௩உ)
தன்மன் சுகிர்தன் சுகிர்தஞ் ஞனசஞ்
சலன்வீ ரியனபிஞ் ஞனசம் ட்ரமனிட்

கன்மன் கவிசந் திகிர்பன் சுகுணக்
கிரகணன் பலகன் மகிவர்ச் சிதனே. (௫௩)

வேறு.

அவாதியபயனசுலப ஞத்திக னகிரகன்
சின்மய னித்தியவிரதன்
சிவாதிபரி பூசதர தனகிர்பண ஞானி
சீலனதி தாகசமனே. (௫௪)

பாவகன யிஞ்சகனி வர்த்தனன கனவீசன
வர்சிகுரு பத்மபதசச்
சேவகன நிட்டுரான் விரத்தனவ தானனதி
தீரனதி நிச்சலனுமே. (௫௫)

உத்தமன் சேவகனு தாரனல சாகனி
சுதர்ரனப ரிக்ரகன்மகா
சத்தியபர னிற்பிருகன் மிதாசன னடம்பனவி
காரிகுணி சத்யதபனே. (௫௬)

சுமந்திர னசலன் னகலன நம்மானி
சுகதன்சு மனசன் சமன்
றமனமச் சான்விசுத் தன்னநக னற்சுபா
தானமிர்த சங்கிர கணனே. (௫௭)

வேறு.

அருபன் னித்திய னநித்திய நிருபணன்
சொருபன் சுத்தன் சுதந்த்ரன் சுவசனே. (ருஅ)

வேறு.

விபரீத பான்னந ருயன்
விவ்கார பராமுக மித்ரன்
னபாரத கினன தொந்த
ன சோகன்பல சாதன னப்ரமனே. (ருகூ)

வேறு.

எந்தப் படையுண் டிகன்மோகர்க் கெழிலார் விவேகர்க் கோரொருவ, ரந்தப் படையைத் துணித்தடுக்க வல்லா ரிவ்வர் றகேகரே. (௪0)

வேறு.

பாதமுதல் வன்றர நிகழ்ந்தபரி பூரண பதந்தனிலெலாமைம் பூதமு மறைந்தற நிறைந்துபடை நின்றநிலை யென்புகல் வதே. (௪க)

செடிதரு முடற்கொடு மனித்தர்கடி வத்தன
மெனக்களி மிருந்தனர்சிவ.
னடிதரு நலத்தன மெனச்சுரர் களித்தனர்
நிலத்தவ ரடித்துகளினல் (௪உ) ஆ. கூருரு.

விவேகன் படையெழுச்சி முற்றும்.

## கொங்கயுக்தம் - தும்பை.

சந்தி யாதமு னிரண்டுபடை யுங்குருக்ருபரி
ஷண்டர் சங்கமதி ரச்சகல வேதமுடனே
நிந்தி யாமிருதி யாகமபு ராணவிதிகா
சாதி சங்கமொரு கோடியெதிர் நின்றதிரவே. (௧)

வார மாகவொரு மோகனர சாளனெனவே
வைத்த வந்தமன மன்னனையு மாயையுடனே
யார மார்முலை யவிஞ்சைமுத லாக்கினவனே
யழிய வும்படை வகுக்கும்விர னாரறிவனே. (௨)

ஆயு மாறரிய மாயைமுத லெண்ணவரிதா
மகில சேனையுயி ராதியவை யங்கொழியவே
வீயு மாகிலும் விவேகன்விடு சேனைபொருதா
வெற்றி கண்டுவிளை யாடலை விரும்பிமிகுமே. (௩)

மாளு மோகனை விவேகனழி வென்றுமனனு
மாயை யுந்துணிய வாளுமிரு தாளுமுடையான்
வேளும் வேகனு முலோபனு முனைபடைபோய்
வீய வேறிருப காதிபடை யேவிவிடவே. (௪)

இலங்கு மெய்ம்மைகொடி யாகவுள தேரினயன
மென்னும் வாள்கொடு நிரூபக னடக்கவெதிரே

கலங்கி நம்மடியில் வீழும்வகை சூழ்குவமெனக்
காம வேள்விடு கொடிப்படைக ளித்துவரவே (௫)

ஊன முள்ளன வொழிப்பவர்க ளாகியுடன்மே
லுள்ள குற்றமுறை யாமனுறை செய்வரதனுஞ்
ஞான முள்ளவர் விளங்கவரு நம்படையினின்
றானி மார்படை நமக்கென நகாமொழியுமே. (௬)

வேறு.

தூற்றி யவர்கட்டி னுமதா தோன்றுமற்
றேற்றி யவர்ப்பேணும் புல்லர்க்குச் சொல்லுவாம். (௭)
நீராட்டி வந்தவர்க ளன்றோ நிரந்தாமா
வோரட்டி வந்தமணை மெல்லாம் வெளியிட்டார். (௮)
காம்பட்ட தோளியர்க ளன்றோவிக் காயத்தைப்
பூம்பட்டி னன்மறைத்துப் பொல்லாங் கறிவிப்பார் (௯)
நாவி யொழுக வருவார் நடைப்பிணமென்
றாவி யொழுகுவதன் முன்னே யறிவிப்பார். (௰)
காயிலை கத்தூரி கருப்பூரங் கொண்டன்றே
வாயின் மணத்தை யறிவிப்பார் மாதரார். (௧௧)
புல்லித் துறக்க வறியாரைப் புல்லியவே
சொல்லித் துறப்பிப்பார் தூய்மொழிபா ரல்லரோ. (௧௨)
பந்தக் குழம்பைப் பழுதெல்லாம் பாரோர்தட்
கெந்தகு ரூவுரிவர்போ லறிவிப்பார் (௧௩)

வேறு

இலகுமுத்துச் சுடுபுறத்துப் படுபலெற்புத் தொடர்களை
கலகமைக்கட் கணைகளப்பிற் குழிழியொத்துக் கழிபவே.

முருகுபுத்தப் புதுமலர்ப்பொற் புறமுடிக்கிற் கமழ்வதே
கருகுகற்றைக் குழலொடுக்கிற் பழையசிக்குக் கமழ்வதே ()

அணிபின்மிக்குத் திகழ்தனப்பொற் பதுமிகழ்த்திற் றசை
களே, துணிபினத்தொக் கனுவிழிற்சற் றதுபுழுத்துச்
சொரிவதே. (கஅ)

உடைமறைக்கப் படுமழுக்கப் புடறெழுக்குத் துளைகளே
கடகவிற்றுச் சிரமென்மதக் கவிகள்கக்கக் கடவரே. ()

அடிதொடக்கிச் சுரிகுழற்றொக் களபுக்திக் கருவரா
விடமொரெட்குத் தளவுகிட்டிப் புகழுமற்றெத் தனையுமே.

புலவுகக்குப் புழுமலப்பைப் புறமறிக்கிற் புவியிலர்
கலவியுற்றுப் பெரிதுவக்கக் கடவர்சுற்றிக் கழுகலால். (க௯)

துரிசுரைத்திப் பரிசின்மைக்கப் படையைமுட்டத் தொட
ரவே, தெரிசனப்பொற் றிகிரியுட்குற் றனர்கருப்புச் சிலை
யரே- (உ0)

வேறு.

புணர்விற் கானநிலாமதி புகுகக் காணுயர் மேனிலை, புன
ன்மிக்கார்தட மேவிய புளினப் பூதர நாண்மலர், மணமிக்
கூர்குளிர் சோலைகண் மகிழப் பாடிய வேழிசை, மலயக்
காலிவை யாவையும் வரவிட் டானிகன் மாரனே. (உக)

சீதத் தாலினி தேயமு நீமிக் காலினி தேருளீர்
தேனித் தார்வன வேபசி தீர்வுற் றுலி ல தேசுவை
யேதெத் தாலினி தாமென வோர்வுற் றேயவி வேகிக
ளேமத் தாமல மாயிவை காமுற் றூரென வோதியே,

வேறு.

வேனி லாதன்வர விட்டபடை வீயநலன்மெய்
விழியெ னுந்திகிரி யைக்கொடு நிரூபகன் வெறுங்
கான னீரினி லெழுந்தழி னெழுங் குமிழியின்
கனவி னிற்கனவு போலழிவு கண்டுவிடுமே, (௨௩)

விட்ட விட்டபடை யாவையு மழிந்துவிடவேன்
வெறுங்கை யோடுபோர மேனிகொடு செல்லவிருதோண்
முட்ட விட்டெழுநி னிரூபகன் விளங்குமறிவா
முளரி யங்கையின் முருக்கினன் முடித்தலையயே (௨௪)

வேறு

பாப ராசிமுத லானபடை கொண்டுபொரு பாதகக்
கோப ராசனை யரும்பொறை யழிக்கும்வகை கூறுவாம், ()

வேறு

இனத்தையறுத் தறுத்தெறியக் கறுத்தெரியிற் சிவத்தே
சினத்தவகத் தினைச்சிதையப் பனிக்கதிரிற் சிரித்தே. ()
கதிக்குமொழிக் கனற்கடுகக் கெடக்குளிரக் கதித்தே
கொதித்தமனக் கனற்கினிமைப் புனற்குளிரக் கொடுத்தே,
அறுத்தழலிட் டருத்தில்வினைப் பலத்தைதினைத் தசித்தே

யொறுத்ததனைப் பொறுத்துநலத் தினைப்பெரிதுந் றொறாத்
தே. (உரு)

வேறு.

கோபனைப்புறன் காணக் கொலைபழி
பாப முற்றுந் துகளெழப் பட்டதே. (உசு)

தாபந் தீர்தரு சந்தோச டன்கொலும்
லோபன் பட்ட பரிசுமுரைத்துமே. (உஎ)

வேறு.

தெருக்குத்தகிதி பலகோடி புண்டெனினுந் தொல்லையிலே
வருத்தவகை யல்லாது துய்ப்பவரார் மண்ணினிலே.
ஒன்றிரண்டே யுடுப்பதுவு முண்பதுவு நாழியே
யென்றுமொரு வன்கிடைப்பிருசானுக் கெண்சாணே

வேறு.

ஈட்டியிழத்தல் வெங்கான மெங்குஞ் சென்று மங்காமற்
கூட்டியிழைக்குந் தேனீயைக் கண்டார்பின்னுங் கூட்டு
வரோ. (உகூ)

ஆடும்பரத ரவைபோல வருகும்படியு மதுபோலத்
தேடும்பொருள்கள் போம்படியுங் கண்டுந்தெளியார் சிலரு
ண்டே. (கூச)

வேறு:

மாநிதி கோடிதேடி யும்மாகா ணியுமின்றி
போனவ ரல்லாதெதாக்கப் புசித்தவரார் புவிக்கணே. (கூஞ)

வேறு.

அலங்கொண்டு லோபன்ற னுசாபி சர்சு
மிரப்புங் காப்பு மசத்யாநி யுஞ்சஞ்
சலங்கொண் டிழுக்கு மொழுக்குந் தவாவச்
சந்தாப முஞ்செற்ற னன்பற் றறுத்தே. (௩௬)

உம்பன் புவிக்கன்றி வானூர்க்கும் யானே
யெனத்தன் மனத்தே நினைத்தங் கரிக்குந்
தம்பன் பெருங்கர்வ முந்தானு மஃண்டான்
சத்யா யுதங்கொண் டதம்பன் றிறத்தே. (௩௭)

வேறு.

வேழி லாவகை விருப்பொடு கலந்துநலனே
வினைய வின்மொழி விளம்பியு முளங்தெளியவே
மாறி லாதசெயல் செய்துமொரு காலுமழியா
மச்ச ரன்றனை யமச்சரன் வதைத்து விடுமே. (௩௮)

மந்த ரக்கிரியு நிற்குதல வேழுகடலும்
வற்று மேழ்புவியு மாளுமுயர் வானவுலகு
மந்த ரப்படுமெ னும்படி தெளிந்துடலின்மே
லாத ரன்றனைய நாதர னழித்துவிடுமே. (௩௯)

நெஞ்சு மொன்றுசொ லொன்றுசெய லொன்றுடையதாம்
வஞ்ச கன்றனை யவஞ்சகன் வதைத்துவிடுமே. (௪௰)

ஈரமொன்றிகழ் சாந்தியெதி ரேறியவகங்
கார மும்படையு மாண்டதோர் கணப்பொழுதிலே. (௪௧)

வேறு,

மொழிந்தவாச கத்தினன்று தீங்குகாறு முன்னமே
யெழுந்தவேக ஞவியோர் விவேகஞ் சிறந்ததே.
மடக்குமாறி லாதவாத ராசகோடி மாளுமே
யடக்கமான வீரன்வாளி னற்றதார வாரமே. (௪௨)

சுபாடிதன் குபாடிதன் சிரந்தனைத் துணிக்குமே
யபாடிதன் வெகுப்பிரலாப ஞவிதன்னை வெளவுமே. ()

மாயையிச் சகத்துவத்து சித்துவீச னெனுந்
தூயசுப்ர புத்தனப்ர புத்தனைத் துணிக்குமே. (௪௪)

வேறு.

சுகனசு கன்றனைத்து ணிக்குமே
சுபனசு பன்றனைத்தொ லைக்குமே
யகனுயிர் பொன்றமெய்ச் சீர்த்திவா
ளதினாக கன்றுணித்த டுக்குமே. (௪௫)

உடலின கந்தையைத் தனைச்சதா
வுணருப வன்கெடுத்து வக்குமே
படருறு சிந்தையைச்ச மத்தனோர்
பரமப தந்தனிற்ப டுத்துமே. (௪௬)

வேறு.

கனலனையவாறு கருக்குமே
வநலச னலசனை யழிக்குமே. (௪௭)
பரமன தருளினைப் பரந்தபன்
கரமென வந்துயிர் கழிக்குமே. (௪௮)

வேறு.

சுவசன் றுயர்வொண் டுசுழன் றுவரும்
விவசன் றுகளாம் வகைசெவன் றனனே. (௪௯)

வேறு,

வர தாரம காவ்ரதன் வாளியினிற்
பர தாரப ரிக்ரகன் பட்டனனே (௫௰)
அதி மாசுறு பந்தனை யெற்றினனே
மதி மானுயிர் வெளவினன் மந்தனையே. (௫௧)

வேறு,

பவந்தங் தன்னிற் படுத்திப் பரந்தெழுந்
துவந்தன் றன்னைநிர்த் தொந்தன் றொலைக்குமே. (௫௨)
இன்பஞ்செய்யு மிறைவ னிணையடி
யன்பன் கையில நாத னழியுமே. (௫௫)
உசாவன் றிண்படை யொண்டி றற்றீர்க்க
விசாரன் சாகசி கன்றனை வெல்லுமே (௫௬)
சீறு மப்ரதி கூலன் சிதையவே
யாறு மப்ரதி கூல னழிக்குமே, (௫௭)
குடும்பச் சிந்தையுங் கோலா கலங்களு
மிடும்பை யுந்துற வின்க ணிறந்தவே. (௫௮)

பிராந்தி சத்திய வாள்கையிற் பட்டதே
சாந்தி யாலதி சம்ப்ரமன் பட்டனன். (௬௧)
ஏக ஞர்படை யாவிப்ப டியினின்
மோக ஞர்படை முற்றுமு டிந்தவே. (௬௨) ஆ. எாபெ

மோகசமவ்வாகை.

விடமன்ன காமன் முதலான சேனை
விறலார்வி வேகர் படையாற்
படமன்னன் மோகன் மிகவேவெ குண்டு
படைகொண் டெழுந்து செலவே. (௧)

இகன்மோகன் முன்ன ரிருண்மீ தெழுந்த
ரவிபோல் விவேக னெழவே
பகலோ னெதிர்ந்த பனிபோ லிறந்த
படுமோகன் விட்ட படையே. (௨)

ஒருகோடி யம்பு விடமோகன்மீள
வொருசண்ட வாயுவுடனே
சருகோடு மென்ன வெழிலார் விவேகர்
தனியம்பு தன்னில்விடுமே. (௩)

வேறு.

மாளமாள விவேகனெய்ய மனத்தின்மந்திர வலியினன்
மீளமீள வெழுந்துமோகன் விடாதுபூசல் விளைக்கவே (௪)

வீயுமோகினை வேரறுமல் விடஞ்செய்மோகன் விவேகனால்
மாயுமோவுயிர் மாயையாரு மனத்தினூரு மிருக்கவே. (ரு)
மூகனாகிய வீசனந்த மனப்பசாசற வெய்யிலே, மோசனாரு
யிர் மாயுமென்றனை முன்னைநான்மறை முடிவதே. (௬)
மோகனாருயிர் மாள்வதேகந்தை மனப்பசாசை முடிக்கி
லென், ஏகநாதர் துணைப்பதத்தில் விவேகராச னியம்
பவே. (எ)

வேறு.

புலகதிகள் யாவையு மரிக்கவே புகலிடமி லாமனநடுக்குறு
வுலகுபதி னாலுமொ ரிமைப்பிலே யொழியுமறி யாமைபி
னொளித்ததே. (அ)

மனமுமறி யாமையு மரிக்கவே
மதிவெனெறி வாள்கொடு துணிக்கவே
முனமுதவு தாயெனும விச்சைதான்
முடுகமதி வாண்முக முழுத்தியே. (௯)

பரவுணர்வு வாளினைவி திர்க்கமா
பருதியென வேயொளி செறிக்கவே
யிரவுவடி வாகிய வவிச்சைதா
னிகலழிய வாருயி ரொளித்ததே. (ω)

அகலிடமி யாவுமத னைக்கொடே
யடையவெறி யாவனு பவத்தினாற்
புகலவரு மாயையை யறுக்கவே
புரணபரி பூரண மெறித்ததே. (கக)

மரணபவ வீடுயிர் பரத்தொடே
மன்னனிரு சேனையு மனைத்துமோர்
காரணமதா வாதலின் மிருந்ததே
கருணைநிதி யாருள மகிழ்ச்சியே. (௧௨)

இப்படி யொன்று மில்லா வகையெலா மிறந்த பின்னு
மப்படி யொன்று மில்லா னமைந்தில னமரி னாசை (௧௩)
பின்னரும் வான மாதிப் பெரும்படை யெழுப்ப ஞானப்
பன்னரும் படையில் யாதும் படும்படி பரமன் பார்த்தே.

வேறு.

வரவி யோமவொலி கோடிசெவி யோடுமடிய
பரவி யோமவிசை ஞானவொலி பண்ணியதுவே. (௧௫)

வாதநூறுபல தொக்குவர மன்னுபரமன்
பாதநூறுணர்வு பற்றியிற வெற்றியிடுமே. (௧௬)

ஊனநாட்டமொளி வந்தன வனந்தவுருவ
ஞானநாட்டவொளி வந்துற நசித்துவிடுமே. (௧௭)

மங்குநாவிற னிறந்தவிர தங்கள்வரவே
யெங்குஞானரத வின்பமிடை யின்றியெழவே. (௧௮)

நாசி நின்றபுவி சேர்மண நடக்கநலமே
வீசி நின்றவறி வாமணம் விழுங்கிவிடுமே. (௧௯)

பிணையென்ன மலரென்ன பெரியதபோ தனருளாலும் பேதஞ் செய்யுங்
கணையென்னக் கற்றவருந் துதிக்குங்கண் பட்டபடி காண்மின் காண்மின்.
(கக)

வேறு.

யரிபுரப தங்களவை பாரீர் பரிமள மணஞ்செய்குழல் பாரீர், நரிபொருது கொண்டபடி பாரீர் நலன்மருவு மன்பர் மதி பாரீர்.
(கஉ)

வேறு.

கலைசூழ் மறிஞர் தஞ்செவியுங்
கண்ணுஞ் செவிடுங் குருடுமாய்க்
கொலைசூழ் வகைசெய் திடுங்கொடிய
கோபன் கிடந்த கிடைபாரீர். (கங)

வேறு,

ஆகமுமா வியும்பொருளு மளித்து நாதற்
கவனருளா லானந்த நாடா ளாதே
காகமுநாய் களுநமனும் பிறவு முண்ணக்
கைவிட்டுக் கிடந்தநிலை காண்மின் காண்மின். (கச)

முன்புமிகப் பொருள்பலருந் தேடித் தேடி
மூர்க்கையுடன் கொடுபோகா திறக்கக் கண்டும்

பின்புமிகப் பொருட்டேடும வாவன் செத்துப்
பிணத்தினும்வா யங்காந்த பெருமை பாரீர். (கரு)

வேறு.

அடித்தலை வணங்காநர பால
ரமைச்சரோ டிருந்தநிர்ப ராசன்
முடித்தலை கிடந்தபடி பாரீர்
முனைச்செயன் முடிந்தபடி பாரீர். (கசு)

உனவரு மகந்தையபி மான
முளவிருள் மனம்பொய்கள வாதி
யனைவரு முவந்தகிளை யோடு
மடையவு மிறந்தபடி பாரீர். (கஎ) ஆகூ எருசூ

---

கூழடுவார்.

என்றுதனி நாயக ரிகற்கள மியம்பிக்
குன்றுதவி லாவினிய கூழட வுரைத்தே. (க)
ஆங்கினி திருந்தன ளணங்கடு மடைக்குப்
பாங்கினிய பேய்மகளிர் பற்பலர் திரண்டே (உ)

வேறு.

அகமாறீபுற முகமாறியறி வறிவாளேபிறி தறியாதாய்
முகமாறீசுக வடிவாய்கூழட வாரீர்கூழட வாரீரே. (ங)

கருதவொண்ணா வெண்ணிறந்த காட்சியெல்லாங் கண்ணான
சொருபமாய் நிகழ்ந்ததுகாண் சும்மேலோ சும்முலக்காய் ()

தோன்றியவிவ் வுலகமெலாஞ் சொரூபமாய் நிகழ்ந்திடினுந்
தோன்றியதுந் தன்கண்ணே சும்மேலோ சும்முலக்காய். [}

எல்லாவண் ணமுமின்றி யிருந்தபடி யேயிருக்கச், சொல்
லாமற் சொல்லியவா சும்மேலோ சும்முலக்காய் (கசு)

எல்லாமா யல்லாத விறையியல்பை யின்னதென்று, சொல்
லாட விரகுண்டோ சும்மேலோ சும்முலக்காய். (கஎ)

புலனறுபாழ் வருஞ்சீவன் போதப்பாழ் வருமீசன், சொலவ
றுபாழ் வருஞ்சொருபன் சும்மேலோ சும்முலக்காய். (கஅ)

வையமுயிர் பரமாக்கு மாயைப்பாழ் மூன்றுமறத், துய்யசு
டர் தானேயாஞ் சும்மேலோ சும்முலக்காய். (க௯)

இடரின்பஞ் செயுமாயை யிருளின்ப வறிவாகுஞ், சுடரின்
கண் டோன்றுமதோ சும்மேலோ சும்முலக்காய். (உ0)

சொருபன்விழி மலர்கண்டு சும்மாவி ருந்துவிடச், சொருப
பரி பூரணமாஞ் சும்மேலோ சும்முலக்காய். (உக)

வாயுணர்வு மாண்டிடத்தே வாயிலா மட்குடத்திற், றோய
மென நிறைந்ததுகாண் சும்மேலோ சும்முலக்காய். (உஉ)

ஊமைமொழி கொடுபிரம மோதவுணர் வுற்றபடி, தூய்மறை
யின் முடிவுரைக்குஞ் சும்மேலோ சும்முலக்காய். (உங)

கற்பகத்தின் றன்னிலைமை தானறிய வேதுகளால்
சொற்பதத்தில் வாராதாண் சும்மேலோ சும்முலக்காய் ()
உற்பலத்தி னழகுமணா முருப்போல வொன்றின்கண்
சொற்பிசைத் தியமாதி சும்மேலோ சும்முலக்காய். (௨௫)
அல்லையுங் குழன்மாளை யவள்பயந்த வகிலம் வெறாஞ்
சொல்லையாய் விட்டதுகாண் சும்மேலோ சும்முலக்காய்.
ஆகுந்தவரு முளவிகற்ப மழிந்துவிடப் பிறவியெனாந்
தொலைந்தபடி கண்டாயே சும்மேலோ சும்முலக்காய் (௨௭)
இன்னதெனு மறைமுடிக்கு மியலாத விப்பரிசைச்
சொன்னபடி கண்டாயோ சும்மேலோ சும்முலக்காய். ( )
சொல்லாத மறைமுடிவைச் சொல்லாமற் சொன்னதனைச்
சொல்லாட விரகுண்டோ சும்மேலோ சும்முலக்காய்.
சாத்திரமென் செயநமக்குத் தர்க்கமய லறுத்தபிரான்
ஶ்ரோத்திரமே வேண்டுவது சும்மேலோ சும்முலக்காய்.

ஆ௳ ௭௯௪.

---

கூழ்சமைப்பு.

ஏகன தடியிணை யிங்ஙனேத்தியே
மோகர்தம் பல்லெலர் முறியக் குத்தியே. (௧)
புண்ணிய னடியிணை போற்றி போற்றியே
திண்ணிய போதகச் செவியிற் றெள்ளியே. (௨)

வேறு

பாதமா மலர்க ணல்கும் பரமனைப் பாடிப் பாடிப்
போதமா விடுத்தி ராகிற் போனக மாக்க வாரீர். (௩)
செம்பொனுன் மகுடஞ் சூடித் தேசிக னாக வந்த
வம்பொனு ரடிகள் சூடா முடிகளை யடுப்பு வையீர். (௪)
வாழ்வுமா டென மயங்கி வள்ளலார் கழலின் வந்து
தாழ்வுறு வறிவிலாளர் தலைகளைத் தடாக்க ளாக்கீர் (௫)
சொற்பதங் கடந்த வின்பச் சொருபனுர் துணித்து விட்ட, வூற்பவ வுதகிச் சோரி யடையவு முலையிற் பெய்யீர்
தொந்தவன் பாசத் தாலே சுற்றிவன் சுமையாய் வந்த
யந்தவிந் தனத்தான் ஞானப்பாவகன் றன்னை மூட்டீர்.
தீதண்டம் பெருக மோகஞ் செய்யுமக் காமராசன்
கோதண்ட மிரண்டாய் வெட்டிக் கூழடத் துடுப்புக் கோடீர். (அ)
இராப்பகல் பசித்துப் பட்ட விடரினை நினைத்து நெஞ்சிற், பராக்கினை யொழித்து நல்ல பதத்திலே யிறக்க வாரீர். (௯)

வேறு.

என்ற நந்தக டத்தி னைக்கிய வின்னமு
தொன்றி னென்றுவி ரைந்தெ டுக்கவு வப்பொடே. (௰)
தொடைத்து நாளுந் தெளித்துத் தொழுது முழுதையும்
படைத்த மாதின் புரிக்கலம் பார்த்துப்ப டைக்கவே. (௧௧)

எமதி யாமென வெண்ணின ராவிஷயலா மெடுத்
தமுது செய்து திருக்கைவி ளக்கின ளன்னையே. (௧௨)

பஞ்ச பாசமி லையெனக் காயெனப் பண்ணியே
பஞ்ச பாசமடைக்கா யமுதுப டைப்பரே. (௧௩)

பத்த ராவிப ருகுதி ருப்பவ ளத்திலே
வைத்த வாயமு தத்தினின் மிச்சில் வழங்கவே. (௧௪)

வருகவென் றுக ணங்களை வள்ளல்க ளெள்ளுரு
ருருகு நெஞ்சொ டழைப்பர்க டம்முட னுண்ணவே. ( )

ஆக அ௱௧௯.

---

இலகும் போதக் கண்விழித்தங் கெல்லாம் போத மெனக் காணு, துலகும் போதமாயையென்ன வோதும் பேய்கள் வாரீரே. (௧)

காணுஞ் சித்துத் தான்பரமன் காட்டுஞ் சித்தென் றுள்ளபடி, பேணு முண்மைப் பொருட்பேதம் பேசும் பேய்கள் வாரீரே. (௨)

வேதா விரோத மறவொன்றும் வீட்டிற் பலவா நாட்டிலெனப், பேதா பேத நிலைநிற்கப் பேசும் பேய்கள் வாரீரே.

கருதும் பொருளெல்லாமழியுங் கருத்தற் றதுவே வீடென்று, சுருதி சொன்ன பொருட்சொல்லுஞ் சுகதப் பேய்கள் வாரீரே. (௪)

எல்லா வுலகங் களுமுடிந்த விடத்தே முத்தி யெல்லாமா

யல்லா தென்றப் பொருள்சொல்லு மருகப்பேய்கள் வாரீரே.
(ரு)

பொன்று முடல்போ வதுமுத்தி யின்பப் பொருளே பொருளல்லா, தொன்று மில்லை யென்றோது முலகா யுதப்பேய் வாரீரே.
(சு)

பானத் தந்தக் கரணத்தின் பதைப்பை யறுக்க வெனக் கேட்டும், பானத் தந்தப் பதைப்பறுக்கப் பார்க்கும் பேய்கள் வாரீரே.
(எ)

அறவே தனைப் பட்டருந்துவது தேடித் திரியா தாரமுதம் பெறவே விம்மி யலமாக்கும் பேய்க ளெல்லாம் வாரீரே.
இருக்கு முதலா மெக்கலையு மிதநோக்குறலா லகநோக்கி யொருக்கும் வகையே முயல்கின்ற யோகப் பேய்க்கும் வாரீரே.

துன்புற் றுழல வமையுமெனிற் றாரத் திரிமி ஞாரமுதுண் டின்புற் றிருக்க வேண்டுதிரே யெல்லாப் பேயும் வாரீரே.

வேறு.

பொல்லாத வுடலமெலாம் பூரணமாகும்பரிச போத கத்தால், வல்லாளன் வென்றகளக் கூழுண்ணும் வகையடங்க வாரீர் வாரீர்.
(ம)

வேறு.

நினைத்து மறந்திச் சகத்தை யெல்லா ரேரே யொறுத்துப் பாரண்ட, மனத்தை யறுத்து மறுமாற்றந் தின்று கொள்ள வாரீரே,
(கக)

போக்கும் வரவு மறுத்தகழல் போற்றிப் போயக் கூழுண்,
டு, வாக்கு மனனு மிறந்திடத்தே வாரா விருக்க வாரீரே.
ஆக்கை யறுத்துக் கரணங்க ளறுத்துச் சிவ பரமறுத்து
வாக்கை யறுத்தா னந்தக்கூ ழுண்ண வாரீர் வாரீரே. ( )

வேறு,

விடாயெல் லாமென்று பொன்னடி சூட்டியே
வேதகஞ் செய்த வீரனை வாழ்த்தியே
விடாயெல் லாங்கெட வுண்ண வரும்படி
மீளு முள்ளக் கலத்தை விளக்கியே. (கச)

இல்ல றந்துற வென்றிலை வேண்டினர்
யாவ ரேனும் வருகென் றிடுவதே
நல்ல றமென யாவர்க்கு நல்கினர்
நாதர் வெல்களக் கூழுண்ண நல்கியே. (கரு)

வேறு.

அலகைகள் கூழிற் கலமாலற்று ரமுதைப்பெற்
றுலகுயி ரீசற் பகிர்வற வெல்லா முடனுண்டே. (கசு)

மெத்தித் தாகங் கெடநுகர் மெய்ஞ்ஞா ஞானந்தந்
தித்தித் தாக மயிர்க்கா ரேறுந் தேக்கிட்டே. (கஎ)

திருகறப்போதப் பேய்பசி யேயோ திருஞானம்
பருகப் போகப் படுவது பண்டைத் தாமுண்டோ (கஅ)

வேறு.

துஞ்ச லின்றியுணர் வின்றிமய லின்றியபலுந்
தொடர்வு மின்றியிட ரின்பமுத லின்றியெவையு

நெஞ்ச மின்றியிது வென்னுமிப் பின்றியுள தர்
மியாவை யுழ்பிரம மாகியதி ருந்தபடியென். (௧௧)

ஆ. அ௨அ.

---

வேறு - குணலைவாழ்த்து.

அலைமிசை யானு மயன்முதலா
மண்டருந் தேடற் கரும்பதமென்
தலைமிசை யானமை பாடீரே
தன்கருணைத் திறன் பாடீரே. (௧)

ஒருநய மின்றி யர்னுழைக்கு
முற்பவ நோய்கெடப் பார்த்தருளுந்
திருநய னங்களைப் பாடீரே
செய்ய கருணையைப் பாடீரே. (௨)

ஒழிவற்ற சோதி யுணர்வுதன்னை
யுளங்கைக் கனியெனக் கண்டுகொள்ள
வழியிட்ட வீரனைப் பாடீரே
வார்த்தை யொன்றென்று பாடீரே. (௩)

மரண பவங்கண் மடிந்திடவே
வடிவு புனைந்து வரும்பெருமான்
சரண நிகழ்ந்தமை பாடீரே
சந்தத மப்பதம் பாடீரே. (௪)

உன்ன வரிதென் றுபநிடங்க
ளோதும் பொருளை யொருமொழியிற்
சொன்ன விரகனைப் பாடீரே.
சொரூபா னந்தனைப் பாடீரே. (௫)

பவமாயம் வேரறப் பார்த்திறைவன்
பதத்தினும் பண்டை நாமொழிந்து
சிவமா யிருந்தமை பாடீரே
சிவப்பிர காசனைப் பாடீரே. (௬)

புத்திக்கு மெட்டரி தாயபொருள்
புவனியில் வந்தைம் புலன்களினுந்
தித்திக்கு மாறினைப் பாடீரே
தேசிக ராசனைப் பாடீரே. (௭)

ஊன நடங்கண்டு முன்னநம்மை
யொருருவாய்வந்து ணர்த்திக்கண்ட
ஞானந டந்தனைப் பாடீரே
நடரா சன்றனைப் பாடீரே. (௮) ஆகூ. அ௰௬.

---

மங்கலவாழ்த்து.

புரியும்விழி தந்தகழல் வாழியே
புறமகமி ருந்தபொருள் வாழியே

தூரியமு மிறந்தசுடர் வாழியே
சொல்லற விருந்தசுகம் வாழியே. (௧)

வேறு.

பேதமபேதம றுத்தவன் வாழியே
பேதமை தீரவ ளர்த்தவன் வாழியே
போதமபோதம றுத்தவன் வாழியே
பூரண போத சமுத்திரம் வாழியே. (௨)

துறந்தவர் கைப்பட்டி ருந்தவன் வாழியே
தொடர்ந்து பிடித்துப் புரந்தவன் வாழியே
யிறந்த வுளத்திற் றிகழ்ந்தவன் வாழியே
யிரங்கி யெனக்குத் தருங்கழல் வாழியே. (௩)

மறந்து நினைக்கப் படாதவன் வாழியே
மயங்கு மனத்தர்க் கிலாதவன் வாழியே
பிறந்து மரிக்கப் படாதவன் வாழியே
பெருங்க ருணைக்கற்ப காடவி வாழியே. (௪)

வேறு.

உருவருவொ டுளதிலது மொழிவில்பான் வாழியே
யுளபொருளை யுணரிலவை யுதறுமவன் வாழியே
கருவழியை யழியவரு காசரணன் வாழியே
கழலும்விழி கருணையுட னருள்சொருபன் வாழியே. (௫)

அழகுபெறு மென்பத மருளுமவன் வாழியே
யடியருள முருகவரு மருளமுதன் வாழியே
பழகிவரு பவதுயரை யழிசெய்பரன் வாழியே
பரகருணை வடிவினிகழ் பரமகுரு வாழியே. (௬)

அறிவுதனி லுருகுமறி வருளுமவன் வாழியே
யகமிகமு மறுவிழியி னமருமவன் வாழியே
பிறிவறு புல்லுருக வருளுமவன் வாழியே
பெருவிழியி னுருவழிசெய் பெருநிலையன் வாழியே. (௭)

வேறு.

அன்னையெ னக்கய லாக்கினான் வாழியே
யல்லல றுத்தெனை நோக்கினான் வாழியே
யென்னை யெனக்குற வாக்கினான் வாழியே
யின்னமு தத்துரு வாக்கினான் வாழியே. (௮)

வேறு.

தொழுமவ ராஷி வாங்கிய வங்கணான் வாழியே
சுகமக மான சாந்தி நெஞ்சினான் வாழியே
யெழுபவ நாச மாஞ்சொல் லொன்றினான் வாழியே
யிமையவர் மூவர் தூக்தொ ழும்பிரான் வாழியே. (௯)

கருதிய கோலமாந் திருமேனியான் வாழியே
கதிரவர் சோதி தாம்பெறுஞ் சோதியான் வாழியே
சுருதிக டேடு வான்பொரு ளாயினான் வாழியே
சுகமக மாக யாம்பெறுஞ் சோதியான் வாழியே. (௰)

வேறு.

தொழுகுலம்வி ளங்கவிமை யோரென்றும் வாடநீள்
சுருதிகள நந்தமுக மாய்நின்று தேடமு
வெழுகுலம் விளங்கவடி யேநின்று சூடவே
யிணையடி வழங்குசொரு பானந்தன் வாழியே. (௧௧

வேறு.

மூவர்தேவர் வாழியென்று முடிவணங்கு மிருகழற்
றேவதேவன் வாழியே சிவப்பிரகாசன் வாழியே. (௧௨)

வேறு.

அலைவா மென்றங் கலையிடு தர்க்கப் பசாச மோசகன் வாழியே, யதுநீ யென்றங் கருமறை யுச்சத் திஞைது மோர் பொருள் வாழியே, சொலவர வென்றுந் தொடர்வரு சற் சிற் சுகாதி காரணன் வாழியே, சொருபானந்தன் கலை யுணை தத்துவப் பிரகாச மாமுனி வாழியே. (௧௩)

ஆக அசகூ.

மோகவதைப்பரணி.

தத்துவநிருபகம்—முற்றிற்று.



பதினெட்டாவது

# அமிர்தசாரம்.

## தத்துவதரிசனம்.

வெண்பா — கலைக்கட்டளை.

### கடவுள்வணக்கம்.

ஞானக்கண் ணாளர்க்கு ஞானானந் தச்சுடரா
யூனக்கண் ணாளர்க் குலகமாய்—வானந்
தனக்குப் பெறவரிய தற்சொரூபன் பொற்றா
ளெனக்குப் பெறவெளிதே யின்று. (௧)

### அருளிறைவணக்கம்.

அறியாமை யாந்திமிரத் தந்தனாய் வீட்டி
னெறிகாண வின்றி நிலையற்—றிறுவேற்கு
ஞானாஞ் சனத்தாலே நாட்டந் தனைத்தந்த
சோனாந் தொழக்கடவ கோ. (௨)

### வேதச்சிறப்பு.

இதினுள்ள தெல்லாக் கலைகளினு முள்ள
திதினில்லா தியாவையினு மில்லை—யதினாலே
யாது மறிய விரும்பினான் யாதுமுள
வேத மறிவான் விரைந்து. (௩)

ஆகமச்சிறப்பு.

கற்பவர்க ளெப்பொருளுங் காண்பவர்க்குக் கண்ணாகு
முற்பவநோய்க் கெல்லா மொருகடுவாந்-தற்பொருடான்
யாதா வுணர்ந்தா ரவர்க்கதுவா மெக்கலையு
மோதா துணர்ந்தா னுரை. (௪)

அறிஞருரைச்சிறப்பு.

எந்தக் குலமாயென் னெந்தக் கலியாயென்
னெந்தச் சமயத் தெவராயென்-சிந்தைத்
துறவிதருஞ் சொல்லே தூய்தாவ தல்லாற்
பிறவிதருஞ் சொல்லே பிற. (ரு)

நூற்பெயர்.

வேதா கமமோதி மெய்ம்மை விளங்குதற்குப்
போதா தெவர்க்கும் புருடாயு-வோத
வுறுமமிர்த சாகரத்தே யுள்ள மதனாற்
பெறுமமிர்த சாரமெனும் பேர். (௬)

அவையடக்கம்.

வேத மொழிப்பொருளை விண்ணவர்கண் மூவருமுன்
போத வுணரா வுலகறிய-வோதுகேன்
வர்ணின்ற வல்விருளை மாற்றுநின் றேனெழிப்பன்
யானென்ற யின்மினியே யான். (எ)

## நன்னெறியுரைத்தல்.

இம்மை மறுமை நிலையன் றெனவிடுக
செம்மை நெறிநடக்க சித்தந்-தமைமீட்க
தம்மை யுணர்ந்தோர் தலைப்படுக தத்துவத்தின்
மெய்ம்மை யறிக விரைந்து. (அ)

## அருமையுரைத்தல்.

பெறவரிது மக்கட் பிறவிபெற் றாலு
மறிவுறா லாய்த லரிதே-வறினுந்
துறவுடைய ஞாத லரிதே யதின்மெய்
யறிவுடைய ஞாத லரிது. (கூ)

## ஞானிலக்ஷணம்.

அறிவுள்ள தல்லதில தென்றறிவான் ஞானி
யறிவான் முழுது மறிவா-னறிவ
னறிவறி யாமை யறவிருந்த வண்ணல்
மறையோது வான்பொரு டான். (ω)

## ஞானிசீலம்.

அருந்தல் பொருந்த லவையொக்கு மேனும்
பெருந்தகையோ ருள்ளம் பிறிதே-திருந்து
மனத்தின்வே றேபதியு மைந்தனுமம் மாதின்
றனத்தின்வே றல்லவே தான். (கக)

## ஞானிசரிதை.

தீதென நன்றெனச் சிந்திப்ப சீராதெளிந்தோர்க்
கோதன மன்றோ வுலகெலாம்—பாதவத்திற்
றீதாத னன்றுதல் சிந்தித்திட்டச்சாத
வேதாவிற் குண்டோ விதி. (கஉ)

## ஞானிபெருமை.

விண்ணே பெரிது மிகவீசன் கைவழியா
மண்ணே யதுபெற்ற மாமாயை—யெண்ணிற்
சிவனிற் பெரியாரிற் சிந்தையிலார் வைத்தா
ரவனிற் பெரியா ரவர். (கங)

## ஞானியேவற்சிறப்பு.

எங்கே வெளிப்படுக வென்று னெழின்ஞானி
யங்கே வெளிப்படுதற் காதரித்தே—யெங்கும்
பரமனவ னேவல்செயப் பார்த்திருக்கும் யார்தான்
றாமவ னேவ றனக்கு. (கச)

## ஞானிபூசைச்சிறப்பு.

அவனுண்ட தண்டமெலா முண்ட தயனுஞ்
சிவனுந் திருமாலு முண்டார்—சிவமென்று
பூரண ஞானியைப் பூசித்தான் பூசித்தான்
காரணனைக் கண்ணாரக் கண்டு. (கரு)

## ஞானியையிகழ்ந்தவர்கேடு.

எழின்ஞானி யையிகழ்வார் கேட்டா ரிகழ்கேட்
டுழலா ரனுமதித்தார் நால்வர்-கழலுதன்
மேதக வென்றவரை விட்டகலா தார்பஞ்ச
பாதக ரென்னப்படும். (௰௬)

## கூடாவொழுக்கம்

யோகத்தி னுண்மை யுணர்வின்றி யூண்பொருட்டா
லேகத்தி னின்றே மெனவியம்பி-மோக
மனத்தவல மாற்றாத வல்வேடர் தம்மை
நினைத்தவருங் காணார் நெறி. (௰௭)

## கனவிதி

நன்ஞான ஞானி மரியா னொருநாளு
முன்னான மோக விருண் முருக்கித்- தன்னுருவைக்
கண்டபொழு தேகழியுஞ் சூக்கவுடல் கன்மபல
முண்டுபோந் தூலவுடல். (௰௮)

தத்துவ ஞானி திருமேனி தாங்கினு
முத்தம லோகத்தி னும்பரா-முத்தன்
றிருக்கோயில் கொண்டவிடந் தேவா லயமென்
றிருக்கோது கின்றவிடம். (௰௯)

உலககாரணம்.

அணுவென்பர் மாமாயை யென்ப ரணுவின்
புணர்வென்பர் பூதமே யென்பர்- குணமென்ப
ரெவ்வே துவுமோ துகவிதற்கே தேதுவென்று
வவ்வேது வேயேது வாம், (௨௰)

காரணகாரியவேறின்மை

மன்னு முதற்பொருளின் மன்னுத விவ்வுலகம்
பின்ன மெனுமாறு பேசற்க-பொன்னே
யணியா வதன்முன்னு மப்பொழுதுங் காய்ச்சி
மணியான போது மறித்து. (௨க)

ஞானனந் தச்சுடராய் நன்றாகி யொன்றான
தானா கியபடத்திற் றன்றன்று-றுவா
யார்த்த கடலுலக மாமோ வியமெழுதிப்
பார்த்து மகிழ்ந்தான் பரன். (௨௨)

நானிலநீர் பைமுட்டை நால்வகை யோனிசரா
மானிடநீர் வாழ்பறவை மாகிருமி-ஞானமிலா
மண்பட்ட தாபரமென் றேழாய் வரும்பவறா
றெண்பத்தி நான்கா யிரம், (௨௩)

ஊர்வ பதினொன்று மொன்பானு மானுடவர்
நீர்பறவை நாற்கால்நேர் பத்தாஞ்-சீர்திகழு

மூவாறுந் தாபரங்கண் முப்பத்து மும்மையோ
ராவடரோருப தாறும். (உச)

அணுப்பிரவேசம்.

ஆன கடங்க ளளவிலவற் றுட்புகுந்து
வானகந் தானின்ற வாறொக்கும்—யோனிகளெண்
பத்துநான் காயிரநூ றாகப் படைத்தவற்று
ணித்தனார் நின்ற நிலை. (உரு)

அழிப்பு.

ஆன வுடம்பனைத்து மைம்பூதத் தேயழியும்
வானாதி பூதமிறு மாயையினி—னானை
யொழிந்தமா மாயவிரு ளுள்ளொளியா ரிம்ப
ரெழுந்தஞா னத்தா லிறும். (உசா)

பவகாரணம்.

செறிபொருள தாகித் திகழ்பளிங்கு போல
வறிபொருள தான வறிவன்றான்—றன்னை
யறியப் பிறவி யறலாற் பிறவிக்
கறியாமை யாகு மடி. (உஎ)

உடலுற்பத்தி.

ஆதபன்வா னாகுதியா னல்குமதி யேன்றதியா
மோதன்முன் டாயிருநீ ருண்டாகு—மாதுடனண்

டன்னுருவா மிக்கநீர்க் கண்டஞ் சமங்கவிழ்தல்
வன்னிபுழு வுண்டேன் மலடு. (உ௮)

## பிண்டகோசம்.

சுவர்செய்து மண்டசையாச் சோரிநீ ராக
விவரங்கள் காலியங்க விட்டுக் கவர்கால்க்
ணட்டுக்கை வைத்து நரம்பிட் டிரம்பெறவே
கட்டித்தோல் வேய்ந்தவகங் காண். (உ௯)

பிண்ட வுருவிற் பிறத்தலாற் கெர்ப்பத்திற்
பிண்ட வுருவா யிருத்தலா-னுண்ணும்
பிண்ட மிடவேண் டுதலா லுடற்பிண்டம்
பிண்ட மெனப்பேர் பெறும். (௩0)

## அண்டகோசம்.

நிலனேழு சூழுவரு நீரேழு கீழ்பார்
தலனேழு வானேழு தப்பக்-குலகிரிக
ளொட்டுநடு மேருகிரி யேமகட கஞ்சூழப்
பட்டுளதோ ரண்டப் பரிசு. (௩௧)

## அண்டபிண்டவேற்றுமை.

வெளியசைவு வெம்மை நெகிழ்வுரமாம் விண்கா
லொளிபுனன்மண் கண்ணுதய லுள்ளங்—குளிர்மதியங்

கொண்டுய்த் தவனறிவு கோசமாம் பிண்டத்து
மண்டத்து முண்டோ வயல். (கூஉ)

## வீடுபேற்று.

நெடுந்தூர மன்மை நினைவுபோ மாறுங்
கடும்பரி கால்வைத்து வாங்கல்-படங்களுக்கோர்
புட்டகம் வேறே புனைத விவைபோலும்
விட்டுடலங் கொள்ளும் வினை. (கூகூ)

உற்பத்தி யாங்தரதை வாயு வுடன்கூடிப்
பொற்புற்ற கொங்கையர்தம் போகத்தே-கெர்ப்பத்தைக்
கொண்டேதை செல்லுமெனக் கூறுவீர் கூறீர்கண்
மண்டேகஞ் சென்ற வழி. (கூச)

## உடலழிவு.

மணனென் றியமாந்தர் வாயுப்போங் காட்டிற்
பிணமென்று பேயிட்டு பேர்த்தக்-கணன்வந்து
புட்கொத்து மிவ்வுடலிற் பொல்லாங் கொழிந்திருப்ப
தெட்குத்து முண்டோ விடம். (கூரு)

## குடும்பவிழிவு.

திடன்படு சீலந் திகழ்கல்வி கேள்வி
யிடம்படு மேதைசி றெல்லாம்-பசுமட்

குடம்படு நீர்போற் குடும்பியைக் கைவிட்
டுடம்போடு கூட வுகும். (௩௰௬)

போகவிழிவு.

சிந்தா குலமனிதர் சீசீ செவிமுதலா
மைந்தானு மீடழிவ ரல்லரோ-வைந்திலொரு
வேட்கை யசுணமிபம் விட்டின்மீன் வண்டு
கேட்கைமுத லோரொன்றிற் கேடு. (௩௰௭)

மகளிரிழிவு.

எரிகொண்டு மல்ல வெறிபடைகொண் டல்ல
வருநஞ்சுங் கூற்றுங்கொண் டல்ல-கருநெஞ்சத்
தம்மாதர் தம்மைப் படைத்த தனியிறையார்
தம்மாலே யாகத் தகும். (௩௰௮)

பொருளிழிவு.

இன்னலா மீட்டுங்கா லீட்டினு மியாவரையு
மொன்னல ராக்கு முயிரிறுக்கு-மன்னு
மனத்தைவே றாய்மயக்கு மானடுக்கஞ் செய்யுந்
தனத்தின்வே றுண்டோ தவறு. (௩௰௯)

அரசிழிவு.

முரசு விளங்குதம் முற்றத்திற் றெற்றி
யரசு வணங்குங் கழலா-ரொருக்கணங்கண்

கல்விய காலிற் கடைகடோ றுஞ்சுழல்வர்
வெவ்விய சொல்ல வெறுத்து. (சO)

சுவர்க்கவிழிவு.

பொருமாதர் தோளே புணர்வ தமிர்த
மதுபான முண்டே மகிழ்வ—தெதுகோடி
சாவார் பிறப்பார் சதுமுகனோர் நாளினிது
தேவா திபரெய்துஞ் சீர். (சக)

நிலையாமை.

உலகி னிலைநிற்ப தொன்றில்லை யென்றே
தலைவர்கண் மூவருஞ் சாற்றினா—ரஃதே
மல்லவு மார்க்கர் மதமு மதனு
னிலையின்மை யொன்று நிலை. (சஉ)

துக்கத்தொகுதி.

கருக்குழவி கௌமாரங் காளைப் பருவம்
விருத்த மழைவெய்யில் வீசும்-பனிக்கால்
கருத்தி றுறக்க முணர்ச்சியெக் காலத்
தொருத்தனின் பத்தை யுறும். (சங)

துறவு.

மடம்படு மிப்பிறவி மாற்ற நினைவார்க்
குடம்பு மிகையென் றுணர்வுற்—றடங்கத்

துறவா மனிதர்க் கெளிதன்றே துஞ்சிப்
பிறவா நெறியைப் பெற. (௪௪)

புத்தன்.

ககனமு மான்மாவுங் காரணனு மில்லை
சகலமு மாமநித்தஞ் சார்வார்-பிறவி
வகைவினை யுண்டு மதிபொன்ற மாய்தல்
சுகதன்றன் முத்தித் துணிவு. (௪௫)

காரணமே யான்மாக் கணபங்கி நித்தப்
புரணமோ வீசன்வான் பொய்யே-மரணமே
வீடென்றா னாத்திகரின் வேறோவிப் புத்தனெனு
மூடன்றான் சொன்ன மொழி. (௪௬)

சமணர்.

உருவருவுண் டில்லை யொன்று பலவாம்
பொருளியல்ப தானளவே போதம்-மருகர்க்
கூறுவினை விட்டா லுலகூம்பர் வீடு
குறியதற் கெட்டுக் குணம். (௪௭)

வெளியிற் பறந்துபோய் வீடெங்குப் பெற்றாய்
குளிர்வெம்மை கண்டாயோ கூட-வுளதில்லை
யொன்று பலவென்று மூனளவென் றாயுணர்வை
யென்று மதிகண்டா ரியார். (௪௮)

## உலோகாயதம்.

இறந்தார் பிறவா ரிலதுவா னீச
னறம்பாவ மாயிழையார் கூடல்-சிறந்த
நலனோர் சுவர்க்க நரகம் பிரிந்த
வுலகா யதன்ற னுணர்வு. (௪௧)

சடவுடறு நன்மைசாக் காடு நரகங்
கடவுள் வலிகாட்டுங் கண்ணுங்-கரும
முடியாமை காட்டு முன்வினையை மாத
னடைவந்த காட்டு மளறு. (௫௦)

## மீமாஞ்சன்.

நரகுசுவர்க் கந்திங்கு நன்றாங் கருமத்
தருமிறை தானன்றி யில்லை-பிரமமொழி
நாடுங் குணன்புத்தி ஞானமில்லா டானம்போல்
வீடென்றான் மீமாஞ்ச கன். (௫௧)

சித்துச் சடமாகை யோமுத்தி செய்வினைகள்
சுத்தச் சடமீய வற்றோ-சுகதுக்கம்
புத்தி குணமாயிற் பொன்றுமோ வான்குணமாஞ்
சத்தப் பிரமமோ தான். (௫௨)

### நியாயம்.

அணங்குற்ற வான்மா வநேகம் வியாபி
குணம்புந்தி யாமுத்தி கூறிற்—பிணம்போல்கை
மெய்யா மிறைவனையும் வீடுகட்டுக் கேதுவா
னையா யிகழா னலட. (௫௩)

செயாது வினைச்சடமாய்ச் சென்மத்தைச் செய்யிற்
றயாவிலனு மவ்வீசன் றானும்-வியாபி
குணமாகிற் புத்திக்குக் கூடா தொடுக்கம்
பிணமாகை யோவீடு பேறு. (௫௪)

### வைசேடிகம்.

முத்தியி னிர்க்குணனாய் முன்னங் குணங்குணியாய்ப்
பத்தியினன் முத்தியுறும் பாவனையாற்—சுத்தச்
சடர்ப்பல ராயவத்தை சார்தலான் மாக்கள்
கடனென்றான் வைசேடிகன். (௫௫)

ஆவ சடலங்க ளனன்மாவே யாமகாம்போ
லாவு மவத்தையுறு முன்னுணர்விற்—பாவனையாற்
கூடுமோ வீடு குணம்போய்க் குணியுண்டோ
சூடுபோய்த் தீயுண்டோ சொல். (௫௬)

### சாங்கியம்.

பகுதி புமான்மெய்ப் பகுதிப்பா லேவிகுதி
சகலந் தனதென்கை பந்தமாம்-விகுதியாம்

யாதும் பகுதி யுடையதெனக் கில்லையெனும்
வேதனஞ் சாங்கியன்றன் வீடு. (௫எ)

முன்னரே யுண்டேற் பகுதியதான் முத்தியிலை
பின்னுஞ் சடமாம் பகுதி-பெறக்கூடா
தன்னாலே வீடெய்து மாகினீ சற்குருவைக்
கொன்னே விரும்பியதென் கூறு. (௫அ)

சைவம்.

மடவன் பசுபதி வாலறிவன் பாசஞ்
சடமா மியல்பு சும்மா-முடன்வியாபம்
பண்டுளவை மூன்றும் பசுபாசம் போயிறையைக்
கண்டுறைதல் சைவர் கதி. (௫கூ)

ஈசனது தோற்றமே தெல்லாம் வியாபித்தாற்
பாச மிலாதான் பதியென்னிற்—பாசமெனில்
விண்டிடா தாம்பதியால் மெய்காணம் வேறுண்டாங்
கண்டிடா நின்ற கதிக்கு. (௬0)

சம்மேளித சைவம்.

பர்சமாம் பந்தம் பசுப்பெத்த முத்தனு
மீசனாதி யிவர்ஞானம்-பூசையா

ஸம்ஹாரக மாற்றி யவரொன்றல் வீடென்றான்
ஸம்மேளி தச்சைவன் றான். (௯௧)

பெத்த மாதி கெடுமான பின்கெடுமே
முத்தியும் பாசந்தான் முன்னுள-தேற்கெடுமே
சத்தி யெனில்வெம்மை போனாற் றழலுண்டோ
வுத்தி யிலதிரண் டொன்றாகா தொன்றுகெடின்
முத்தி கெடலோ மொழி. (௯௨)

பாசுபதம்.

ஆகல மிறைமுன் பணுத்திரள் செய்யுஞ்
சகலாத்து மாக்க டளையா-மலங்க
ளாகமலம் பூசையா லொப்பாகை முத்தி
பகர்கின்றான் பாசுபதன். (௯௩)

சகம தனுவாஞ் சடஞ்செய்யு மாறென்
புகலனுவும் பூதமே யன்றோ-வகமில்
கிரியையாம் பூசை கெழுமலங்கள் போக்கி
விரியு மிருளா லிருள். (௯௪)

வாமம்.

தன்னிய சட்கச் சமயிக ளெவ்வுருவும்
பெண்ணுருவிற் காணும் பிறப்பதெலா-முண்ணறவே

புத்தியு முத்திப் பொருளுந் தரும்பிணமே
சத்தியிலாதவெலாந் தான். (கரு)

மேதினி யொன்றை விளக்குமோ வித்தின்றி
மாது தருகுவ மையற்-பிறப்பன்றோ
போத மழிபுலனீர் புத்திக்கு முத்திக்குஞ்
சாதன மானதோ சாற்று. (கக)

## பைரவம்.

ஏகமாம் பைரவமென் டத்துவமா மெண்கலையா
யாகிய ஞாலந்த ஞர்ச்சனையாற்-போகமா
முத்தரிக்கு நால்வரா னல்வரா யோகத்து
வித்தரிக்கு முண்ணறவால் வீடு. (கஎ)

ஏகத்து வங்கெடுமே யெட்டானன் மற்றவையே
யாகிற் கலைசொல்லா தாயழியும்-போகமுனக்
குள்ளதோ வன்றோ தருவா ருருகருத்தோ
கள்ளதோ நல்குங் கதி. (கஅ)

## காளாமுக மாவிரதம்.

வேணியென் பக்கு முதறரித்து மெய்விரதந்
தானு முரைப்படியிற் றப்பாமற்-பேணிப்
புரைதங்கா தானசிவ லோகம் புகன்மா
விரதங்கா ளாமுகன்றன் வீடு. (கக)

தவவேடங் கொண்டவுட றானழிந்தாற் போமே
யுனவயோகின் றீடேற்று முன்னைச்-சிவலோக
மெங்குமெனக் காணாதே யோரிடத்தே யேறினார்
சங்கையில் வீழ்வதற்குத் தான். (௭0)

சிவாத்துவிதம்.

அனாதி சிவஞ்சகத்து மாருயிரு மாகத்
தனாதுருவைத் தானே பகுத்துத்-தனாலொழியப்
பேறிழ வில்லை பெறுவானு மீவானும்
வேறிலதென் றறிகை வீடு. (௭௧)

தானே சகத்தாய்ப் பகரினது தான்சடமாந்
தானே பிறப்பாக்கிற் றொழிக்கிற்-றானே தன்
கண்ணைக் கலக்கிக் கடவுளா முற்சிவம்போய்
வெண்ணைக் கழுமோ விளம்பு (௭௨)

வைஷ்ணவம்.

நாராய ணாயதிரு நாமந் தரித்தலா
லாரா தனையா லடிமையெனப்-பேராழி
கோயிற் பொறியுள்வை குந்தப் பதந்தந்தை
தாயிற் றருஞ்சீ தரன். (௭௩)

மண்ணா லிடுநாமம் வாளெரியா லிட்டகுறி
புண்ணா முடம்பொழிந்தாற் போகாதோ-விண்ணாடில்

வைகுந்த மேவுதிரு மாலுருவங் காணவொரு
மெய்கொண் டிருக்குமதோ வீடு. (௭௪)

மாயாவாதம்.

அவிகார மேபிரம மாயையினா லாகி
யிவிகார மெல்லா மிறக்கும்-பவமான
வூனதும்பொய் ஞான முதித்ததும்பொ யஞ்ஞானம்
போனதும்பொய் மற்றுமெலாம் பொய். (௭௫)

அவிகாரத் தன்மை யவிகாரங் காணி
லவிகாரந் தானல்ல வாகு-மவிகார
மாயை யறியி லவிகார மாயையாய்
வீயும தாரறிவார் வேறு. (௭௬)

சௌரவாதம்.

தோற்ற நிலையிறுதி செய்தலாற் றொல்லுலகி
லேற்றவிரு ளெல்லா மிரித்தலாற்-போற்றவருஞ்
சங்கரன்மா னான்முகனாய்த் தற்பரனாய் நிற்கின்றான்
வெங்கதிரோ னல்லதிலை வேறு. (௭௭)

ஈசன் முனிய வெயிறு வீழவிழுந்தான்
மாசுண வாயின் மறைப்புற்றான்-றேசினா
லுற்பவமா முள்ளத் திருளொழியா னோருருவன்
றற்பரனா வல்லனே தான். (௭௮)

## சோமவாதம்.

பேர்தல் வருதலுளன் பூரணனு மல்லவிவன்
பாதிநா டோன்றுன் பகலவன்றுன்— சோதியா
லிந்திர சால விருளொழியா னென்னலாற்
சந்திரனு லென்செயலாந் தான். (எகூ)

## ஊழ்வாதம்.

தனுகம் வினையே தரில்வினை தான் செய்ய
முனுக முளதாய் முடியு—மனுதிபெனி
லெஞ்ஞான்று முத்தி யிலதாகு மிவ்வூழிற்
கஞ்ஞான மாகு மடி. (அ0)

மந்திர மானதெலாம் வார்த்தையே யவ்வார்த்தை
யந்தர வானின் குணனதுவே—வந்து
பலியா தருள்குருவைப் பாவியா னுகில்
வலிதா னவன்றன் வலி. (அக)

## மருத்துவாதம்.

மருந்தா னொருவரிம் மாநீ ருலகத்
திருந்தா ரெனக்கண்ட தில்லை—வருந்துவதென்
யார்க்கு மழிவு வினைப்பதாம் யாக்கையெனு
நீர்க்குமிழி பூண்கட்டி நீ. (அஉ)

### ஜாதிசங்கற்பம்.

ஆதிபே தந்தா னிலாமை யருந்தவர்கள்
சாதிபே தஞ்சிறிதுஞ் சாற்றுவரோ—சாதிகுல
நல்லார் தொழத்தக்க ஞான முடையவரே
அல்லா ரிழிகுலத்தா ராம். (௮௩)

### தீர்த்தசங்கற்பம்.

அறன்சாரா வுள்ளத் தறியா வழுக்குப்
புறன்சாரு நீராலே போமே—திறன்சாரா
வோடுந்தீர்த் தந்தா னுடற்கே யுளம்விளங்க
வாடுந்தீர்த் தந்தா னறிவு. (௮௪)

### அருச்சனை சங்கற்பம்.

சலமுழுகி நீர்தேடிப் பூத்தேடிச் சாணி
நிலன்மெழுகி யர்ச்சியா நிற்பார்—புலமிலவ
ருள்ளத்தே நின்ற வுலப்பில்பர மானந்த
வெள்ளத்தே நின்று விடாய்த்து. (௮௫)

### அத்துவாசங்கற்பம்.

இந்நெறி யிந்நெறியென் றெம்மார்க்க மும்பகர்க
வந்நெறி யெல்லா மறிந்தவழி—வெந்நெறியக
லெய்தலா மந்த நெறியென் றறைந்தமறை
மெய்தவா வீட்டி னெறி. (௮௬)

சாத்திரசங்கற்பம்.

ஓது முறையின் பொருளுணர்ந் துள்ளபடி
போத மறியாப் புலவர்நூ-லோது
மொருகோடி நூறு யிரத்தானு முண்மை
யருகூடு போகா ரவர்.
(அ௭)

பிரமாணசங்கற்பம்,

அறியப் படுமளவை கொண்டளவை யெல்லா
மறியக் கடவ வறிவை-யறிய
விருப்புற் றிடுவான் விறகதனைக் கொண்டு
நெருப்புச் சுடுவா னிகர்.
(அஅ)

தர்க்கவாதம்.

தர்க்கநெறி வென்றக்காற் றம்ப மிகப்பெருகுந்
துக்க மிகப்பெருகுந் தோற்றக்காற்-றர்க்க
நிலைபெறுவ தொன்றல்ல நெஞ்சுகன்றக் கத்துந்
தலைபறியே யெய்துபயன் றான்.
(அ௯)

வாதத்தொகுதி.

உரைத்த துரையா துரைக்குஞ் சமயம்
பரத்தை யறிவுற்ற பான்மை-மரத்தி
னவயவத்தி னேரொன் றறிந்தார் மரமா
வவயவத்தைக் கொண்டவர் றாம்.
(௯0)

கேடுகண்டிரங்கல்.

கருத்துகட் கிடாய்க் கதிபலவா வீச
னுரைத்ததென் றொன்றுணர வொட்டா-புரித்திங்
கிலதுள தென்னு முளதில தென்னுங்
கலதியர்க டஞ்சமயக் கத்து. (௬௧)

நன்னெறி.

எய்த வெளிதா மிறையரு ளில்லையே
லெய்த வரிதா மியாவர்க்கு-மெய்தெளிந்தா
லெம்மார்க்கத் தோடு மிகலற் றிருக்குமதே
சன்மார்க்க மாகுநெறி தான். (௬௨)

அட்டாங்கயோகம்.

இயமநிய மாசனம் வாயு விசையங்
கமையுறு பிரத்தியா கார-மமையுறு
தாரணை தக்க தியானஞ் சமாதியென
வேரணியும் யோகங்க ளெட்டு. (௬௩)

ஏம முறுமியம மீரைந் திவைதன்னிற்
றூய்மை யருளூண் சுருங்கற்-பொறைசெவ்வை
வாய்மை நிலைமை வளர்விப்ப வாற்றுவ
காமங் களவு கொலை. (௬௪)

வாய்மை யெனப்படுவ தியாதெனின் வாய்மையினத்
தீமையி லாதவெனச் செப்புவர்க-டூய்மைமிக

வோதும் பரமா மூலப்பிலா வொன்றென்பர்
வேத முடிவுணர்ந்தோர் மெய். (கூ௫)

மம்மர்செய் யாமை வதையாமை யெவ்வுயிர்க்குந்
தம்முணர்ந்தோர் தம்மை வதையாமை-தம்மை
யெறிபடை கானீ ரெரியிற் படாமை
யறிகை யெனவறிவ ரால். (கூ௬)

மதுகையில் வஞ்சனையி லோர்பொருளை வெளவு
மதுகள வென்ப ரறிஞர்- மதமோகிற்
றன்னதல் லாத வுடம்பைத் தனதுதா
னென்னல் களவாகு மென்று. (கூ௭)

அரிவையர் தம்மை யணுகாமை யாகும்
பிரம சரிய மதினும்-பெறுதற்
கரிய பிரமத்தொன் றானார் பிரம
சரிய முடையவரே தான். (கூ௮)

தாயோடு தந்தைமகத் தாரந்தான் சத்துருவாந்
தீயவனு நேரொக்கக் காணுமது-செவ்வையர்ந்
தூய நிலைமை சுருதி நெறித்துணிவு
தாயர்போன் றன்பு தயா. (கூ௯)

பிழைசெய்தார் தம்மைத்தாம் வென்றுவிட வேண்டி
இகல்செய்யா தென்றும் பொறுக்க-இகல்செய்யிற்
கோபத்தை யொன்றையுங் கொல்க வதுவல்லா
றுபத்தை யெல்லா மறும். (ப)

அற்புத யோகிக் கனுகூல மானவூ
ணற்பவூ ணவ தெனவறிக-வாடுகின்ற
பொற்புறு நீரிற் புறத்தூய்மை யுட்டூய்மை
சிற்பொருளா லுள்ளந் தெளிவு (பக)

நியமம்.

தவஞ்செபஞ் சந்தோட மாத்திகந் தானஞ்
சிவன்றரு நல்விரதஞ் சித்தாந்தக்-கேள்வி
யுவந்த சிவபூசை யொண்மதிநாண் பத்து
நிவந்த நியமங்க ளாம். (பஉ)

தவநோன்பா லூண்சுருக்கித் தம்முடம்பை வாட்ட
லெவனுன் பிறவியெனக் கெய்திற்-றெந்தாலே
சிவமான முத்தித் திறனேமிதன் றேர்தல்
பவமாறப் பண்ணுந் தவம். (பங)

கூடியது கொண்டமைதல் சந்தோடங் கோகநக
னூடு முதலா நவில்கின்ற-வெப்பதமும்
வீடிப் பாமுளத்தே மெய்காண் மகிழ்ச்சிசந்
தோட மெனுஞ்சுருதிச் சொல். (பச)

ஆத்திகம் வேதநெறித் தோற்றமா மாதரத்தோ
டீத்தல் பயன்கருதா தீகையாங்—காத்திரத்தால்
வந்தித்தல் வாயார வாழ்த்தன் மனத்திறையைச்
சிந்தித்தல் பூசை செயல். (௱௫)

பிரமந்தா னுய்த்தெளியப் பேசுமறைக் கேள்வி
திரிவன்னத் தோர்கட்குஞ் சித்தாந்தக்—கேள்வி
புரையில் புராணந்தான் பொய்யிலா மாதர்
சரதவே ளாளர்க்கு மாம். (௱௬)

மந்திரந் தாரக மாதியா மன்னிருடிச்
சந்த மதிதெய்வந் தான்கொண்டு—முந்தி
யுரைவாய் துடியுள்ள வொன்றிற்கொன் றோரா
யிரமாம் பயனுண் டிவை. (௱௭)

வெறுதே யரிதெனினு மென்மேல் விருப்ப
மறுதே யிதுவே யறம்பொருளின்ப
மிறுதான வீடு மெனக்குரவ னேவன்
மறுசெயன் மாவிரத மாம். (௱௮)

ஆசின் மறைநெறியி னுதவு தான்மதியான்
றேச வழக்கிற் சிறந்த—மறைநெறியி
லாசிது வென்னுங் கருமத் தருவருத்துக்
கூசுது நாணமெனக் கொள். (௱௯)

## ஆதனம்.

பத்திரங் கோமுகம் பங்கேரு கஞ்சிங்கஞ்
சொத்திகம் வீரஞ் சுகாதனம்—முத்த
மயிலாச னந்தண்ட மாயோ கியர்கள்
பயிலா சனங்களிவை பத்து. (௱ ௰)

செவ்வே யுடலுங் கழுத்துஞ் சிரமுமுற
வெவ்வா தனத்தே யிருந்தவர்க்கும்—கைவந்தால்
வாத முதனோய் நலியா மதியுடையோ
ராதன மென்ப ததூ. (௱௰க)

## பிராணாயாமம்.

வாங்கிப் பதினாறு மாத்திரை நான்மடங்கு
தாங்கித்தற் பாதிதனைவிடக்—கால்வலத்தால்
வாங்கி யிடத்தி லிடத்தேதல் வலத்தில்விட
வோங்கார முச்சரித்துக் கொண்டு. (௱௰உ)

## பிரத்தியாகாரம்.

ஒருக்காலு முள்ள முபாதிவே றாகப்
பிரித்துணர்வைக் காண்டலும் பின்ன—வுபாதி
களைத்துப் பருகிவெறுங் கண்ணாக் குதலும்
பிரத்தியா காரமெனப் பேசு. (௱௰ங)

### தாரணை.

ஆய வுடம்பனைத்து மைம்பூதத் தேவைத்து
மாயையி லேவைத்த மாபூத—மாயை
பரத்திலே வைத்தப் பரமேதா னாகத்
தரித்தலே தாரணை தான். (௱௰௪)

### தியானம்.

பொருளின்மெய் காண்டல் புலத்தியான முள்ள
பொருணினை தல்புத்தித் தியானம்—பொருளறிந்த
பேதை மறிதல்போ தந்தியானம் போதமே
யாதல் பரத்தியான மாம். (௱௰௫)

### சமாதி.

காய முதலையா காரியா தியிலழித்து
மாய விருளினவை மாள்வித்து—மாயை
யொருக்கித்தன் றற்று வுளபரத்தோ டொன்று
யிருக்கை சமாதி யியல்பு. (௱௰௬)

### அணிமாதிபலவிகழ்ச்சி.

நல்ல வியோகெட்டு ஞானத்திற் கங்கமெனுச்
செல்வ மணிமாதி சிந்தைசெய்வார்க்—கல்ல
விரும்பின் சுவர்கரும்பின் கோலா விடுந்து
விரும்பித் தவிடெடுப்பார் வேறு. (௱௰௭

ஈருடல்.

வேய்ந்ததோல் சோரிதசை வெள்ளென்பு மச்சைசிரை
சேர்ந்த திரமேல தேகமா—மேய்ந்த
வகனுற் கரணமீ ரைம்புலன் வாயு
பகர்சூக்கம் பத்தொன் பது. (௱ெஅ)

பஞ்சகோசம்.

அன்னம் பிராணன் மனஞான மானந்த
மென்னுங்கோ சங்க ளிவையைந்தும்--பன்னுங்
கிரமத்தா லொன்றிற்கொன் றுள்ளாகுங் கேடில்
பிரமத்தா லாகுநிலை பேறு. (௱ெகூ)

பஞ்சாசயம்.

பந்திக்கு மாமா சயம்பக்கு வாசய
மந்த மலமுவர்நீ ராசயங்கண்—மைந்த
ருறைதரு கெர்ப்பா சயமென் றுடற்கே
யுறைதரு மாசயங்க ளைந்து. (௱உ௦)

ஈரேழுநாடி

ஈரேழு நாடி யிடைபிங் கலைசுழினை
வாருணை நாட்பூடா வைரி--யலம்புருடை
காந்தாரி பைசுனி சங்கினி யத்தி
சிகுவை குகுபுருடன் கூ. (௱உக)

### ௬ரேழுவாயு.

பிராண னபான னுதானன் வியான
னராவிசையன் றேவதத்த னுமை—கிருதரனே
அந்தரி யாமி முக்கியன் பிரபஞ்சன்
வைரன் சமானன் வளி. (௱௨௨)

### ஷடாதாரம்.

மூலாதிட் டான மணிபூ ரகம்விசுத்தி
யேனு மனாகத மாஞ்ஞை—யிருமூன்றின்
மேலாதா ரத்துமதி வெய்யோன் விசுத்தியிற்றீ
மூலாதா ரத்துறைய மூண்டு. (௱௨௩)

### அஷ்டவிகாரம்.

உன்ன வருங்காம கோப முலோபமுடன்
மன்னுறு மோக மதமாச்—சரியந்
தன்னை மிகமதிக்குந் தம்பம் பொறாமையெனு
மின்னல் விகாரங்க ளெட்டு. (௱௨௪)

### ஷட்பாவனை.

ஒன்றிற் பிறத்த லுளதாத லோங்கிவள
ரன்றிப் பருத்த லறத்தேய்தல்—பொன்ற
லெனுமாறு பாவமு மிவ்வுடற்கே ஞான
கனமாந் தனக்கில்லை காண். (௱௨௫)

சட்கோடி.

வீடுபற் றில்லை பிறிதொன் றி ஞற்றன்னை
வீடுபற் றில்லை பிறிதொன்றைத்—தன்ஞலும்
வீடுபற் றில்லைதன் ஞற்றன்னை யிவ்வாறு
கோடியு மில்லை தனக்கு. (௯உ௬)

சடனம்.

அன்னபா னங்கள் பிராணனை தேயாகு
மன்னு மகிழ்வு மடிவு—மனத்தன
வின்னலா மூத்த மிறக்க வியாக்கையு
ளென்னுக்கு நாடி விலது. (௯உ௭)

முக்காரகம்.

மயலுடல் வாக்கு மனமென்று மாந்தர்
துயருறு மின்பமுந் துன்பமுந் — துய்க்கச்
செயலுரை சிந்தனை தீமையு நன்று
முயல்வன காரக மூன்று. (௯உ௮)

மும்மலம்.

உருவுணா வொண்ணு வகையுணர்வை யொன்றி
மருவிய வாணவ மாயை—கருமங்கண்
மூக்குந் தவிடு முமியு மிவையாக்கை
யாக்கும் பலவித்துக் காம். (௯உ௯)

### முக்குணம்.

அந்தமாஞ் சாத்திகமுந் தூய்மையி ருமதரு
மத்திம ராசதமு மாந்தர்க்கு—நித்த
மறிவறி யாமை யவற்றின் புணர்ச்சி
குறியுடைய மூன்று குணம். (௱௯௰)

### மூப்பிணிக்குணம்.

நீதி கருணை நிலைமை யளிமானம்
போத மவையின்மை போரிற்—புறங்கொடுத்தல்
மேதக் கவர்ப்பழித்தல் வேண்டா தவைபிதற்றல்
வாதக் குணமு மதி. (௱௯௧)

அறிவுடைமை யைந்தடக்க லாகத் தழகு
நெறியுடைமை சொல்வன்மை நீர்மை—பெறவரிய
வத்து விதஞானந் தாதரவா மாண்மையிவை
யித்தகுண ஞவமெனப் பேசு. (௱௯௨)

பொறிபிற ராமை புகழ்கருணை யூக்கங்
குறிமதுகை கோப மிலாமை—பொறையோர்
கிபமின் றியுவீகை நெஞ்சத் துவகை
கபமொன் றியகுணமுக் காண். (௱௯௩)

### முத்துக்கம்.

ஆதிபௌ திகமாதி தெய்விக மான்மிகமென்

ரோது துயர்மூன்றி னுட்க வருமிடியின்
வாத மழைவேனில் வன்னி பனியாதி
பௌதிக மாகும் படர். (௱௩௪)

வாயு முதலேனு மானுடர் மாப்பறவை
பேயசுரர் நாகத்தார் பீடையாங்-காயத்தின்
மானஞ் சினமவா மாச்சரிய மாதிமனத்
தானதுய ராதியான் மா. (௱௩௫)

இடனில் கருப்புகுத லீங்குப் பிறத்த
னடையுடன் மூத்த னரைத்தன்-படமை
நிலைவறச் சாத னிரயம் புகுத
லனையவை தெய்விக மாம். (௱௩௬)

மூவேடணை.

மகப்பற்ற தாகும் வருஞ்சுற்ற மெல்லாஞ்
சகப்பற்றுச் சங்கற்ப மெல்லா-முகப்புற்ற
வெப்பொருளு மத்தப்பற் றிவ்வே டணைமூன்று
மெய்ப்பொருள் கண்டால் விடும். (௱௩௭)

மூவவத்தை

காணுமது நேரே நனவா நிலைபேறு
காணாமை காணு மதுகனவா-மொன்றையுங்
காணா தொழிகை சுழுத்தியாங் காணாமை
காணுங்கட் கில்லை யவை. (௱௩௮)

நாற்கரணம்.

ஐய மனனு மபிமான மாங்கார
மையலற வேதுணிதன் மாமதியாஞ்-செய்ய
வருசிந் தனைசித்த மாகு மவையே
யொருநான்கா முட்கரண மொன்று. (௱௩௯)

ஐம்பூதம்.

காசினிநீர் தீகால்வான் கந்தஞ் சுவையொளியூ
றோசைமா பூத முறுகுணங்கள்-மாசில்
செவிமெய்வாய் கண்மூக்குச் செப்பிய நுண் பூத
மவையறியு மைம்புலன்க ளாம். (௧௪௦)

ஓதுகுணம் வான்முதலா வொன்றிற்கொன் றேறுமுறை
யீதனடை பேர்க்குத லின்ப-நீதிவாய்
கையொடுகால் பாயு ருபத்தங் கருமங்கள்
செய்யும் புலனைச் செப்பு. (௧௪௧)

பூதநிறம் பொன்வெண்மை செம்மை கருமைபுகை
யோர்து முருவ மதற்குரைக்கில்-நீதி
சதுர மதிபாதி மூன்றுறு கோண
மதியமாம் வட்ட மவையாம். (௧௪௨)

உண்ணிலை.

புத்தி கருமப் புலன்பத்த தின்விடயஞ்
சத்த வசனாதி தான்பத்துச்-சித்த

மகமான வன்றன் கறிவா ணெருவ
னகமா கியவிருபத் தைந்து. (கசரு)

புறநிலை

தசைமயிர்தோ லென்புசிரை தண்ணிணநீர் மூளை
யுதிரம் பெலம்பசி தாக முறக்க
மிதுன மறப்பிருப்பு மேலோங்க லோடல்
கதிகிடத்தன் மானபயங் காதல் கதநா
ணிதமாம் புறத்திருபத் தைந்து. (கசச)

இருபத்தெட்டு,

விகுதி யிருபத்து மூன்றும் பகுதியு
நாலாறு கண்ட புருடனுங்-கால
முயர்ந்த வியோமம் வியோமா திதமென்
றியம்பு மிவையிருபத் தெட்டு. (கசரு)

தத்துவமுப்பத்தாறு.

தலமுதலான் மாவீறு சத்திசிவம் வித்தை
சலமில் சதாசிவ மீசன்-கலைமாயை
யேறுவிச்சை கால மிராக நியதியையைந்
தாறசுத்தஞ் சுத்த மரோ. (கசகு)

தத்துவந்தொண்ணூற்றாறு.

பூதநிறங் கோசம் புறநிலையு முண்ணிலையும்.
வாத விகார மலங்குணங்க-ளாதார

மேக புருடனை யஞ்சா லவத்தையென
வாக விவைதொண் ணூற் றாறு. (௧௪௭)

### தத்துவநிச்சயம்.

உலவாத தத்துவத்தி னுண்மை யுணர்ந்தா
லிலவா மிவையியம்ப லென்னை-பலவாகக்
கண்ணிலவு மாசுடையார் கண்டாற் பலவாமோ
தண்ணிலவொன் றல்லவோ தான். (௧௪௮)

### குணசம்பந்தாவவத்தை.

மூத்திற னான குணத்தன மூன்றவத்தை
யுத்தமமாஞ் சாத்திக மாமுணர்ச்சி-தான்கனு
மத்திம ராசத மாண்ட சுழுத்திதா
னத்தம தாமதம தாம். (௧௪௯)

### அவத்தாந்தரவவத்தை.

நனவு முதலவத்தை நாலவையோ ரொன்றின்
நனவு முதனாலுங் கண்டார்-கனவா
நனவு முதனாலுங் காணார்கள் காண்பர்
நனவாக ஞான கனம். (௧௫௦)

நனவி னனவு புலன்வழக்க மாகு
நனவிற் கனவு நினைவா-நனவில்
மனநினை வின்மை சுழுத்தி நினைவின்மை
தனைநாடு தறுரியந் தான். (௧௫௧)

கனவி னனவுபோற் காண்ட னனவாங்
கனவினிற் கண்டு மறத்தல்-கனவாங்
கனவிற் சுழுத்திகா ஞானமைகாண் பானே
யனுமதித்த லாமற் றது. (கருஉ)

சுழுத்தி நனவொன்றுந் தோன்றாமை தோன்றல்
சுழுத்தி கனவாஞ் சுழுத்தி-சுழுத்தி
யரிய வறிவா லழிக்கை சுழுத்தி
துரியமாஞ் சொல்லிறந்த பாழ். (கருங)

துரிய நனவா மிதமுணர்ந்த போதந்
துரிய கனவா மகமுணர்ந்த-போதந்
துரியச் சுழுத்தி விரோமந் துரியந்
துரியம் பரமாகச் சொல். (கருச)

ஆதாரகேதாவஸ்தை.

சந்தித் திடம்புருவந் தன்னினிலை சாக்கிரமாங்
கந்தரத்தி னிற்கை கனவாஞ் - சுழுத்தியா
விந்த மெனுமிதய மேவலா முந்திக்கு
நால்விரலி னுலா வது. (கருரு)

காரணகேதாவஸ்தை

நனவிற் பதினாற் காரணமு நான்கு
கனவிற் சுழுத்தி கருத - லறமூன்றுந்

ஆனதாகை வேறாகை தான்றுரிய மற்ற
தெனதியா னற்ற விடம். (கருசு)

அவத்தைக் கழிவு.

ஒருக்க நனைப்போங் கனைப்போ முளத்தை
தரிக்கத்தற் றியானத்திற் றற்சுழுத்தி - போரு
மரிக்குஞ் சமாதி துரிய மதீதம்
புரித்துப் பரம்விளங்கப் போம். (கருஎ)

தரிசனவத்தை.

சுழுத்திநன வின்வரிற் றோன்றியிடுஞ் சீவன்
பழிப்பினதீ தத்திற் பரமன்-விழித்தவனேற்
றீதொருங்க வாண்ட குரவன் றிருக்கோல
மேதொருங்கித் தோன்று மென. (கருஅ)

மாவாக்கியம்.

அதுநீயா னென்னு மப்பதங்கண் மூன்றி
னதுவென் பதுபிரம நீயென் - பதுசீவ
னா யெனும்பதந்தா னவ்விருவ ரைக்கியமா
ஞானூ முபாதி யொழித்து. (கருகூ)

ஓங்காரம்.

புகலு மறையவத்தை காலம் புவன
மிகலுகுணந் தீயிறைவர் செய்கை-தகவே

யகார வுகார மகார மதனுற்
சகலமுந் தாரக மாம். (கசு0)

அசபை.

அஞ்ச வுருவிருபத் தோரா யிரத்தறுநூ
றெஞ்ச லறநின் றியம்பாமற்—றுனியம்பித்
தஞ்சப் பிரமத்திற் றன்வேறன் றென்னுமதே
அஞ்ச லொழிக்குந் துணை. (கசுக)

ஸ்ரீபஞ்சாக்ஷரம்.

சிவமுதற் றத்துவங்க டேவதைகள் செய்கை
யவனிமுதற் பூத மவத்தை—புவனங்கள்
கோசம் பொறிபுலன்கள் கூறுங் கரணமெலா
மீசன் றிருவஞ் செழுத்து. (கசுஉ)

ஸ்ரீ அஷ்டாக்ஷரம்.

நாராய ணாய நமவென் பொருள்சீவ
னோராரி றைமயக மென்றறிகை—பேர்வேறு
காரண காரிய காயத்தா னென்றுக்கும்
பூரண போதப் பொருள். (கசுங)

வாக்கியவிவேகம்.

வாக்கி யறுதியிட வெண்ணு வொருதன்னைப்
போக்கி யிலாத பொருட்—னருளாலே

பாக்கியத்தால் வந்து பலிக்கி னலதில்லை
வாக்கியத் தார்கா ணுமாறு. (கசுரு)

சீவபரவேறுபாடு,

அறிவா னறிவனென வாகத்தே சீவ
னிறையோனென் பாருண் டிருவர்—பிறியாச்
சுபாசுபங்க ளாலிவரைச் சொல்லவரு பேத
வுபாதிகளா னல்லதுரு வொன்று. (கசுச)

சீவலக்ஷணம்.

இதமக மெய்து மிரண்டு தொழிலு
மதிய தவையறிந்த மாத்திரமே- சீவ
னிதன் பலங்க டனக்கில்லை நித்த
னதனை யறிவா னவன். (கசுரு)

பரலக்ஷணம்.

எப்பொருட்குங் காரணமா யெப்பொருட்கு மீசனு
மெப்பொருட்குந் தோற்ற நிலையிறவா—வெப்பொருடா
னல்லா திலதா யகமும் புறமுநிறைந்
தெல்லா மறிவா னிறை. (கசுசு)

சீவபரவேறின்மை.

உபாதி யொழிந்தா லுயிர்பரங்க ளொன்றே
சுபாசுப ராய்நின்ற தோற்ற—முபாதி

கடாகாய மாகாயம் வேருகக் காண்கை
யடர்கா ணறிவொன்றே யாம். (கசூஅ)

மாயாவிவேகம்.

அறியாத மாயைக் கடியறியத் தேடி
னறிவா லறியவொண் ணாது -மறியாமைக்
கேது வறியி லறிவா லிருட்கேது
சோதியைக் கொண்டறிந்து சொல். (கசூகூ)

உலகவிவேகம்.

போதக்கண் பூதங்கள் பொய்யா மவைமெய்யாம்
பேதக் கடாதிப் பிறழ்வுகளிற்-பேதங்கள்
சுத்திகையின் வெள்ளிபின்மெய் தோன்றப் படுங்கனவு
நித்திரையைப் பாரக் நிலை. (கஎ0)

அயலாக மெய்போ லனந்தபே தத்தை
மயலாகக் கண்டமா மாயத்-துயில்போ
லெண்படு மிவ்வுலக முண்டாமா றெங்ஙனே
கண்படைபோ யுண்டோ கனு. (கஎக)

வன்னி யிருக்கமரம் வன்மிசையூ ணுணதே
தன்னிகழ்ச்சி யின்றேவித் தன்மையர்-ஞன்னுண
தன்னிகழ்ந்தா னுண்டோ சகத்துன்பஞ் சற்குருவால்
வன்னிகண்டா னுண்டோ மரம். (கஎஉ)

# அமிர்தசாரம்.

## ஞானமுதன்மை.

யோகாதி மூன்று முணர்வதனுக் கங்கமா
மாகா தெனிற்பதங்க ளாயழியுந்—தேக
மொழிய வருமுத்தி யொன்றுதற்கு ஞான
விழியை யலதில்லை வேறு (௭௩)

## ஞானலக்ஷணம்.

பொறிவா யறிபுலன்கள் போதக் கரண
வறிவான வெல்லா மடங்கி—யறிவா
யறிவா னறிவ தறியும் பொருளென்
றறியா தறிவ தறிவு. (௭௪)

## ஞானப்பெருமை.

அலையிலே கன்ம மடியிலே யாக்குந்
தலையிலே ஞானந் தரிக்கு—மலையா
தருமறை நூலே யறியுஞா னத்தின்
பெருமை யறியார் பிறர் (௭௫)

## ஞானபூசை.

இன்பக்கண் ணீராட்டி யேத்தி யெழின்மலரா
வன்பிட்டுத் தம்மை யமிர்தாக்கி—முன்புற்ற
சிற்சடமேல் வாஞ்சிவ மாகநோக் கல்சிவற்
கர்ச்சனை யாரு மது. (௭௬)

### ஞானயோகம்.

யோகத் தபாவமெனும் யோகமது கைகூடி
னேகப் பொருளதனை னெய்தியிடு—மேக
மதுவா மிதுவன் றெனுவகண்ட மான
வதுவாகை மாயோக மாம். (௧௭௭)

### ஞானவழி.

புணர்பாவ புண்ணியங்க ளெண்ணிறந்த தெல்லா
முணர்வா மெரிகொளுவி னுண்டோ—வுணராமை
கூடவெந் தேழுத துண்டோ குழைந்தமரங்
காடுவெந் தீப்பட்டக் கால். (௧௭௮)

### யோகநழுவுதல்.

யோகத்தா லேகத்தைக் கூடா ரிடையிலுயிர்
போகிற்றான் பொல்லா வுலகிற்—புகாநல்ல
யாகத்தர் னெய்து பயனெல்லா மெய்திப்பின்
யோகத்தான் மூத்தி யுறும். (௧௭௯)

### ஊழ்வழி.

தந்த வறியாமை போகவுந் தான்போகா
திந்த வுடனிற்ப தென்னெனி—னுந்தாங்
குசவன்கை விட்டாலுங் கூடா திகிரி
திசைவந் திடாதே விட. (௧௮௦)

### முத்திசாதனம்,

தருபயன் வேண்டாத் தருவினைகள் சாந்தி
சுருதிகள் கேள்வி துறவி—குருவைப்
பெறுதற்கிங் கேது பெறற்கரிய முத்தி
யறிதற்கிங் கேது வவன். (௧௮௰௧)

### ஆசாரியலக்ஷணம்.

சிறையா முடன்முதல் சித்தமீ றாக
விறையோனே யானல்லே னென்று—மறைந்
யதுவா னென்ற தெதுவானே னென்று
விதுநீதா னென்பா னிறை: (௧௮௰௨)

### ஆசாரியன்மகிமை.

உள்ளந் தனினின் றொளித்தான் பரன்குரவன்.
கள்ளந் தனைத்தவிர்த்துக் காட்டினான்—வள்ள
லருவான கோலமோ வக்கோலங் காணக்
குருவான கோலமோ கூறு. (௧௮௰௩)

### அனுசாரியலக்ஷணம்,

துயிற்புணர்ப்பாற் கொர்ப்பந் தொடுகடனீ ராமை
மயிர்ப்படா மின்மினியின் வன்னி—முயற்கோ
டெருத்தின்பான் மெய்யுணர் வில்லாதான் பண்ணுங்
குருத்துவமு நேராகக் கொள். (௧௮௰௪)

## பக்குவலக்ஷணம்.

காய நிலையின்மை கண்டான் கருத்துச்செந்
தீயி னடுவிற்றான் சித்தஞ்-சினவரவின்
வாயுறு மண்டுகத்தின் னெஞ்சம் வரியுழுவை
தாயவா னுள்ளஞ் சமம். (௱௮௫)

## அபக்குவலக்ஷணம்.

தம்பாற் றவந்தூய்மை வாய்மை தயாவிலா
ருய்ய னடிபேறா ருள்ளபொரு-ணம்பார்
பொருள்செய்ய வாதரிப்பார் போக நினைவா
ரருள்செய்ய லாகா தவர். (௱௮௬)

சித்தியா நிற்குஞ் சிலர்க்கு விபரீதப்
புத்தியா குஞ்சிலர்க்குப் போதமே-சுத்தமாம்
பானீய மொன்றேனும் பாம்புண்டா னஞ்சீனு
மானீயு நல்ல வமிர்து. (௱௮௭)

## சீஷசரிதை

கழல்போற்ற வாயாரக் கண்மல்க வுள்ள
மழல்சேர் மெழுகி னழிவெய்த-யாக்கை
யெழில்சேர் குருபரன்ற னேவலே செய்க
நிழல்போல முன்பினு நின்று. (௱௮௮)

சந்தனந் தாம்பூலந் தாரார்த னஞ்சயன
மந்தனம் பொய்வெய்ய மாற்றங்கள்—சிந்தைக்
கரவழி மானங் கலுழ்ச்சி களிப்பின்ன
குரவன்முன் மேவாது கொள். (௱அகூ)

சம்பிரதாயலக்ஷணம்.

அங்கையுற்ற நீராக்கொண் டர்க்கை பொருளாசீ
பங்கயக்கண் ணாற்கொண்டு பண்டைவினைச்—சங்கையறு
பூத மலமுழுதும் போத மெனநிகழ்த்தப்
பாதமலர் வைத்தான் பரன். (௧௬0)

ஊனுயிர்வேறுபாடு.

ஆக்கை முதற்சித்த மீறாக வெப்பொருளு,
நோக்கு மவன்றன்னை நோக்கா—தனவசடமாச்
சாக்கியா நின்றவவன் சற்குருவா வந்தபரன்
வாக்கில் வெளிப்படுங்காண் வந்து, (௧௬௧)

கலைக்கட்டளை முற்றிற்று.

---

அநுபவக்கட்டளை,
சிவதரிசனம்.

போக்கு மனனொருக்கிப் போதமங் கில்லாமை
நோக்கிய நோக்காலந் நோக்கத்தை-நோக்கென்னுன்
றோன்றுத வண்ணம்போய்த் தஞ்சிற் றிருளறிவாச்
சான்றாகி நின்றேனன் றான். (௧)

வினைப்பய னென்னை யினிமேவா வின்ஞாத்தி
யனைத்து மழிந்து மழியே-னெனக்கின்று
முன்பக்கங் கீழ்மேன் முதலிடையீ றென்றனவு
மென்பக்கற் காணே னியான். (௨)

இல்லாது முள்ளது மெல்லா மறிவேனு
னெல்லாப் பொருள்கட்கு மேதுநச-னெல்லா
வுலகும் படைத்தழித்துக் காத்துணர்வா யொன்று
யிலகும் பரமீசன் யான். (௩)

துரியதூஷணம்.

விரிந்தா லுலகறியு மேனுக்கா துள்ளே
புரிந்தாற் றனையுணரும் போத-மருந்தவ
மாட்சி யுடைய பரமெனவே மற்றிதன்
காட்சியு மாட்சியுங் கண்டு. (௪)

கரணங் களிற்கலந்து காணாமை நின்றான்
கரணங் களையொருக்கிக் கண்டான்-றனைத்தான்
கரணியாய் நின்ற விவனதே கண்டாய்
மரணம் பிறப்புற்ற மால். (௫)

அதீததரிசனம்.

அறிவென் பதனா லறியும் பொருளு
மறிவு மறிவானு மாகும்-பிறி தின்றிச்

சொல்லாட வில்லாத் துரியாதி தம்பிறக்க
வெல்லா மகிழ் விரு. (சு)

தேய்ந்து தெரிவு தெரியாமை யென்பதற
மாய்ந்த தெனவும் வகையில்லை-மாய்ந்ததுவும்
போந்த விடத்தே புகனு மஃதொழிய
மாய்ந்த விடத்தில்லை மற்று. (எ)

வியோமதூஷணம்.

அடங்குகை யாலே யதீதமு நின்னே
மடங்கொள் சுழுத்தியை மானுந்-திடங்கொள்ள
நில்லாக் கனவே துரிய நிலையிரண்டு
மல்லாமை யாலவத்தை யாம். (அ)

பாதரிசனம்.

அதீதம் பொருளென்ற லப்பொருளே தென்று
னதீதம் பொருளா வறிந்த-புதனொருவ
னுண்டாங்கா ணென்றொன் றுரைத்தா னுரைத்தனுமே
கண்டா னதுகாணுங் கண். (கூ)

பிறிதுக் கறிவிருந்த பெற்றியே னென்ன
வறிவிற் கறிவா விருந்த-வறிவை
யறிவே யறிகின்ற தன்றி யறியப்
பிறிதேனு மில்லை பிறழ்வு. (ம)

அகமிதங்க ளில்லை யறிவயர்வு மில்லை
யிகபரங்க ளொன்றறிய வில்லை-சகமு
மெரியினுக்கு வெம்மையுரு வென்ன விறைவ
னுருவதற்கு நேரே யுணர்வு. (௧௧)

ஐக்கியவிருப்பம்.

பூத மறிந்த வறிவுபிராம்பேர்தமா
யாது மறிந்தவறி வீசனும்--பேதமறப்
புல்லிற்றெங் கேயென்றுன் புத்தேளிர் கோக்கண்ணீர்
மல்கித்கான் வீழ்ந்தான் மகன். (௧௨)

பின்ன மறிந்த செயல்போலப் பின்னமே
தன்னை யறிந்ததுவுந் தற்செயலாய்-நின்ன
செயன்மான் டதுகாண் சிவமென்று னீச
னயன்மா லறியா வவன். (௧௩)

ஒருக்கவே றில்லா வுணர்வாம் பரமும்
பருக்க விடயமெனப் பண்ணி-யருட்சொருபன்
பேசா திருவென்னப் பேதங்கா ணுதிருந்தான்
வாசாம கோசரத்தே மாண்டு (௧௪)

இலங்க வறித னனவாகு மெங்குங்
கலங்க வறிதல் கனவாம்-புலன்கெட்ட

தெல்லாஞ் சுழுதியா மிம்மூன் றவத்தையினு
மெல்லா தனுகா ணறிவு. (கரு)

[illegible]னு முயிரு முணர்வு முடனிறந்து
யானு மிறந்து பரனிறந்து-கோனே
வடிவேது மாறின்றி வாக்கிறந்து மேயிய்
படியே யிருக்கும் படி. (கசு)

இரண்ட சமவாயந் தீர்பாழிற் சீவ
னிரண்டாம்பா ழிற்றோன்று மீச-னிரண்டும்போய்
மூன்றும்பா ழிற்றோன்று மூன்றும் பதப்பொருளாஞ்
சான்றுரு மில்லாத் தனி. (கஎ)

சொரூபதரிசனம்.

ஆவபா வாபாவந் தீர்ந்த வகோசரமு
மோவு மவத்தைகளி னொன்றாக்கிச்-சீவபரந்
தானாற் றிருந்த தனிப்பதங்கா ணீதென்று
மோனத் திருந்தான் முனி. (கஅ)

நோக்கினன் றனைய் நிகழ நுனிதமறை
வாக்கினாற் கூறரிய வான்பொருளை-நோக்கிச்
செயிர்தீர்ந்தே னென்றெழுந்தான் மைந்தன் சிலையின்
றுயிரீந்த மீனதனுக் கொப்பு. (க௯)

நிறைவுற்ற தெவ்வாறு நின்மலனுந் தன்னை
யறிவித்த வாறறிய லாக்கா-நிறைய்

முழுத்துமா லானந்த முந்நீரி னுள்ளே
யழுத்துமு மைக்குடத்தி னும். (௨0)

அநுபூதி,

இருந்த படியே யிருந்தபடி காணா
விருந்த படியே யிறைவ-னிருந்தபடி
யப்படியே யென்னு மஃதொழிய வப்படியை
யெப்படியே யென்றுரைக்கே னியான். (௨௧)

ஊனான வூனிற் குயிரான வுள்ளுணர்வு
தானாய்ப் போதத் தமமாகு-யானான
வென்னை டொன்ற விறையான யாதுமாய்
நின்றனு யென்னைய் நீ. (௨௨)

காண்டகையே யென்கைக் கடனன்றே யில்லெனின்
றண்டகைதாள் சூடார்க் கயலன்றே-மாண்டேன்
சயம்புவே யென்னினுரை தானுண்டோ வெவ்வா
றியம்புவே னென்றறியே னியான். (௨௩)

நாரணனு நான்முகனு நாடப் பெறுரின்ன
மாரணமுஞ் சொல்ல வறிகுதிலே-காரணநின்
செம்மா மலர்ப்பாதஞ் சென்னிப் பொறித்தார்க்குக்
கைம்மாறு காண்கிலேன் காண். (௨௪)

ஒல்லை யுலகு படைத்தழிக்க வுன்னுணர்வால்
வல்ல சொருபாவென் வஞ்சமனக்-கல்லைத்

திரித்தருள வேண்டியொரு தேசிகனுங் கோலந்
தரித்தருள வேண்டியதே தான். (௨௫)

சொரூப வெனக்குன் றுணைமலர்த்தாள் சூட்டி
யிருவரு நேரொப்பே மென்றே-வருளாலே
நின்னை யனையானை நீயு மருளாலே
யென்னை யனையே னியான். (௨௬)

வந்திக்கச் சென்னிவாய் வாழ்த்த மனனுருக
விந்தத் திருக்கோலத் தெம்பெருமான்-வந்தெனக்குப்
பொன்னங் கழலருளிற் பூரணபோ தச்சொரூப
வின்னம் பிறப்பே யினிது. (௨௭)

என்கை பணிசெய்ய வெம்பெருமாற் கெம்பெருமா
னென்கை பணியாக வென்வாக்கு--நின்கீர்த்தி
கற்றென்றும் பாடக் கனியமனங் காணிறைவா
மற்றொன்றும் வேண்டேன் வரம். (௨௮)

அளித்தான் றிருமேனி யைம்புலனுங் கொண்டு
களித்தான்பே ரானந்தக் கண்ணீர்-குளித்தான்
குளித்தானம் பாலென்றுங் கூர்ந்தன்பான் மீண்டு
மளித்தா னருட்சே வடி. (௨௯)

ஆக திருவெண்பா ௨௱௨௰.

அமிர்தசாரம்முற்றிற்று.

---

உ

அடங்கன் முறை

# பாட்டு முதற்குறிப்பகராதி

## அ

## ஸ்ரீ தத்துவராயர் அடங்கன்முறை பாட்டு முதற்குறிப்பகராதி

## முற்றிற்று